## காமயோகம்

பகவதாராதன ரூபமான யாகாதிகள். இவை இஸ்டம் எனபபடும பகவத் சரீர பூதர்களான பிராணிகளுககு உப காரமாகச செயயும் தானங்கள், கிணறு, குளம, தோணடு தல், சததிரம், சாலை யமைததல் முதலிய பூர்தத தாமங்கள். பஞச மஹா யஜஞங்கள் இவற்றுக்கு யோகயதையை விளைககும வாண ஆசரம தாமங்கள் இவற்றைப் பலா பேக்ஷயினறிககே பகவத கைங்காயமாகச செய்கை.

## ஜஞானயோகம்

இப்படி கர்மாநுஷடானததால் பாபஙகள் கழிநது மனம நிாமலமாகப் பெறறு வைராகயம தலையெடுதது, யம நியம ஆசன பரஞயாம பரதயாஹார த்யான தாரண சமாதி எனனும அஷடாங்கயோக க்ரமத்தாலே ஆத்மாவை ஊனக் கணணால காணபது போல ஞானக கணணால் கண்டு, அதற்கு மேலும சென்று பகவத் சாக்ஷாத் காரம் பணண முயன்று, சுபாச்ரயமாக (தியானததுக்கு விஷயமாக) ஸ்ரீய பதியை கோமுகாசாரமாக (சங்க சககரங் களோடு கூடிய பகவானுடைய தோறறமானது பசுவின் முகம் போல தோன்றுதல் கோமுக ஆகாரம் எனப்படும) த்யானிக்கப புக எமபெருமான் விலக்ஷண விகரஹயுக்தனும் லக்ஷ்மீவிசிஷடனும் இவாகள் ஹருதய கமலததில் ஆவிர் பவிதது (தோனறி) அருளவன அததிவய மஙகள விக்ர ஹததை தைல தாரை போல இடைவிடாமல தயானிததல ஜஞான யோக மெனப்படும.

## பக்தி யோகம்

இப்படி த்யான விஷயமான எமபெருமானை விதியே என்று உலாநத ஹருதயத்தால் அநுசந்திககாமல் ஈரநெஞ்சி னல் பரேமபூாவகமாக பரம போக்யமாக அநுசநதித்தல் பக்தியோக மெனபபடும

கர்ம ஜ்ஞான பக்திகள் கஷ்டப்பட்டு அநுஷ்டிக்கப்பட வேண்டியவை. விரைவில் பலன் தராதவை. பல பிறப்புகள் பிறந்து பாபங்கள் கழிந்த பிறகே பலன தருபவை சேதனா களால் அநுஷ்டிக்கப்பட்டு உருவாகுமவை. ஜ்ஞானமும் சக்தியுமில்லாமையாலே பலன தருமபோது ஈசுவரன் வேண்டும பரதந்த்ரமான (ஈசுவரனிட்ட வழக்காயிருக்கும)ஆத்ம ஸ்வரூபத்துக்குச சேராதவை என்பதறிந்து எல்லா உபாயங்களையும ருசி வாசனைகளோடு விட்டு, தன்னிடத்தில வேறு உபாய மில்லாமையையும, வேறு கதி யில்லாமையையும (ஆகிஞ்சன்யம், அநந்யகதிதவங்களை) முன்னிட்டுக்கொண்டு நீயே உபாயமாக வேண்டுமென்று பிராட்டி முன்னாக ஈசுவரனையே உபாயமாகப் பற்றுகை

## ஆசார்யாபிமானம

ஈசுவரன் தடுப்பாரில்லாத சுதந்த்ரன் நாம சரணாகதி பண்ணினாலும் அவன் இரங்கினாலன்றி ரக்ஷித்தே யாக வேண்டுமென்று நிர்ப்பந்திப்பார் இல்லாமையாலே நம் அபேக்ஷிதம் சித்திப்பதரிது சரணாகதியும உபாயமன்று அவன் இரக்கமே உபாயம அவன இரக்கத்தை யார வருவிக்க முடியும? பரதன பூரண சரணாகதி பண்ணியும விரும்பிய பலன் கிடைக்கவில்லை சரணாகதிக்கு மஹா விச்வாசம (பெருநம்பிக்கை)வேண்டும நாம பண்ணிய பாபத்தின மிகுதி, உபாயத்தின் எளிமை, நாம் விரும்பும் மோக்ஷ பலத்தின் அருமை, இவை ஒவ்வொன்றுமே பெரு நம்பிக்கையைச் கெடுக்கும் சுதந்த்ரனான ஈசுவரன் ரக்ஷிப்பதற்கும் சிக்ஷிப்பதற்கும் உரியவன ஆதலால் குற்றங்களை எண்ணிச் சிக்ஷிக்கவும் விடுவன ஈசுவர சம்பந்தம் பந்த மோக்ஷங்கள் இரண்டுக்கும பொது. அச்யுதனைப பற்றியவர்கட்கு சித்தி கிடைப்பது சம்சயம் (சந்தேகம்) என்றே சாஸ்த்ரங்கள் கூறும்

ஆசார்யன் பரதந்த்ர ஸ்வரூப முடையவன் தண்டிக்கும குணமில்லாமல கருணையே வடிவானவன. சிஷ்ய

னுடைய உஜ்ஜீவனத்தையே விரும்புமவன். சிஷ்யன் தீயவழி யில் செல்லும்போது ஈசுவரனைப போல் உதாசீனம் பண்ணி யிராமல் திருத்திப் பணி கொள்ளும் ஸ்வபாவமுடையவன்- ஆசார்ய சம்பந்தம் மோக்ஷத்துக்கே காரணமாயிருக்கும். மோக்ஷத்தில் சம்சயமில்லை. மற்றும் பல காரணங்களாலே ஈசுவரனை உபாயமாகப் பற்றுமல் ஆசார்யனையே உபாய மாகப் பற்றி ஆசார்யன் அபிமானத்திலே ஒதுங்கி ஆசார்ய னிட்ட வழக்காயிருக்கை ஆசார்யாபிமானம் எனப்படும் உபாயம் ஸ்ரீ மதுரகவி யாழ்வாரும், ஸ்ரீ ஆண்டாளும், ஸ்ரீ வடுக நம்பிகளும் இந்நிஷ்டை யுடையவர்கள்.

உண்மையில் ப்ரபத்தி உபாயம் வேறு, ஆசார்யாபி மான உபாயம் வேறு அன்று ப்ரபத்தியே சரமோபாயம் (கடைசி உபாயம்) சரமோபாயத்தில் இரண்டு பாவங்கள் (கணுக்கள்—நிலைகள்) உண்டு முதல் பருவம் ஈசுவராபி மானத்தில் ஒதுங்கி நிற்கும் சரணுகதி, இரண்டாம் பருவம் ஆசார்யாபிமானத்தில் ஒதுங்கி நிற்றல். 'குருரேவ பரம ப்ரஹ்ம' (குருவே பரப்ரஹ்மம்) 'பீதகவாடைப் பிரானூர் பிரமகுருவாகி வந்து' முதலிய பரமாணங்களாலே ஈசுவரனே ஆசார்யனுக அவதரிக்கின்றுன் என்று அறிகின்ருேம் ஆகை யால் ஈசுவரன் வேறு, ஆசார்யன் வேறு அல்ல கரும்பின் நுனிப்பாகமும் அடிப்பாகமும் போன்றவர்கள் ஈசுவரனும் ஆசார்யனும் ப்ரபத்தி யுபாயத்தின் ஒரு பகுதியே சரமோ பாயமாகிய ஆசார்யாபிமானமும்.

## விரோதி ஸ்வரூபம்

உத்தேச்யத்துக்கு (விரும்பியதற்கு)த் தடையாயிருப் பது விரோதி எனப்படும் இந்த விரோதி ஸ்வரூபமும் ஐந்து வகைப்படும் அவையாவன :—ஸ்வரூப விரோதி, பரத்வ விரோதி, உபாய விரோதி, புருஷார்த்த விரோதி, ப்ராப்தி விரோதி என்று ஐந்து வகைகளாகும்.

**ஸ்வரூப விரோதி** :—தேஹமே ஆத்மா என்னும் எண் ணம், அந்யசேஷத்வம் (அந்யருக்கு சேஷப்படுதல்—அடிமை

யாதல்) ஸ்வஸ்வாதந்த்ர்யம (தான் ஈசுவரனுக்கு அடிமை யல்ல; சுதந்த்ரன் என்னும் நினைவு) முதலியவை ஸ்வரூப விரோதிகள்

**பரத்வ விரோதி**·—இதர தெய்வங்களைப பரம புருஷ னோடு சமமாக நினைககையும், பகவானுடைய அவதாரங் களை மநுஷ்யாகளாகவும் விலங்குகளாகவும் நினைக்கையும, அர்சசாவதாரத்தை உலோஹம், கல, மரம், சுதை, ஓவியம என்று நினைககையும, ஆசசைககு சகதியில்லையென று நினைக் கையும் பிறவும பரதவ விரோதிகள்.

**உபாய விரோதி**. - உபாயம என்று ஈசுவரனுககுப் பெயர். ஈசுவரனே சாக்ஷாத் (நோ) உபாயம் மறற உபாயஙகளுக்கும் பலமளிபபவன் ஈசுவரனே யாவான். ஆதலால் இதர உபாயங்கள சிறநதவை எனறும், அவை தாமே பலன் தரும் எனறும நினைபபதும, சரணாகதியை எளி தாக சிறிதாகச நினைககையும (குறைய நினைககையும) தான பண்ணும சுக்ருதங்களை (நலல காரியங்களை) உபாயமாக நினைக்கையும பிறவும உபாய விரோதிகளாம.

**புருஷார்தத விரோதி** —இவ்வுலகததில் நலல புதலவா, மனையாள, நவையில கிளை, இலலம, நிலம, மாடு (செலவம), என்னும இவற்றைப புருஷாாத்தமாக நினைப்பதும, சுவாச காதி போகஙகளைப் புருஷாாத்தமாக நினைப்பதும, பகவா னுக்குச செயயும் கைங்காயஙகளிலும அவன உகந்ததென்று செயயாமல தான் உகநதவற்றையே செய்கையும், சப்தாதி போக விஷயங்களில் ருசியும புருஷாாத்த விரோதிகள்

**பராபதி விரோதி**·—பகவத் விஷயத்திலும், பாகவதா விஷயததிலும செய்யும் அபசாரஙகளும், பகவத பாகவத ஆசார்ய விஷயஙகளில் உயர்ததி கண்டால் பொறுகக மாடடாத அசஹ்யாபசாரங்களும் (காரணமின்றியே பகவத பாகவதாசாாய விஷயங்களில் செயயும தீங்கும) அசஹயாப சாரமாகும்: பகவ தபசாரத்திலும பாகவதாபசாரம் மிகக் கொடியது. பாகவதாபசாகம் பல வகைபபடும். அவற்றுள்

மிக்க க்ருரமானது ஜனம நிரூபணம் (தாழநத ஜாதியில் பிறந்தவாகள என்று குன்றைய நினைக்கை)

மறறும அன்னதோஷம்—ஞான விரோதி, சஹவாச தோஷம போக விரோதி, அபிமானம்—ஸ்வரூப விரோதி எனபன போன்ற விரோதி வர்க்கங்களையும் யூகித்தும்கேட்டு மறிக! இபபடி அாதத பஞ்சக ஜ்ஞானம பெற்று எந்த் விரோதங்களும வாராதபடி வாழ்வாங்கு வாழக்கடவாகள் வைஷ்ணவாகள.

## பஞ்ச ஸம்ஸ்காரம்

தத்வத்ரய ஜஞானமும் அர்தத பஞ்சக ஜ்ஞானமும பிறந்தாலும ஸ்வரூப யாதாத்ம்ய ஜஞானம (தன் நிலையை உள்ளபடி யறிகை) பிறப்பது அரிது இந்த ஜஞானம பெறு தறகு ரஹஸயதரய ஜ்ஞானம் வேணடும் இதனை பஞ்சசமஸ காரம் மூலமாகப பெறவேண்டும. இதனை பாகவத புருஷ காரததை முன்னிட்டுககொண்டு ஞான மநுஷடான மிவை நன்ருகவே யுடையஞன ஆசாாயனை ஆச்ரயித்துப பெற வேணடும

ஸமஸகாரம என்ருல சுததி (திருத்தம)என்று பொருள. அநாதி காலமாக அஹங்கார மமகாரஙகளால ஆதமா அசுததமடைநதுள்ளது மாதா பிதாககளின சேர்க்கையால் பிறநத பஞசபூத மயமான சரீரமும அசுததமானது பகவத சமாசரயணததுக்கு இந்த அசுதததங்கள நீஙகிச சுததி பெற வேணடும முமுக்ஷுவுககு ஐந்து வகையான சுத்திகளை வேத சாஸதரங்கள விதிககின்றன

அவை:-''தாப புண்ட்ரः ததாநாம மநத்ரோ யாகஸச பஞசம" என்று சொல்லப்படுகின்ற சகராதி தாரணம். ஊர்த்வபுணடரம, தாஸய நாமம், மந்த்ரோபதேசம, திரு வாராதனம என்னும ஐநது ஸமஸகாரங்கள

இவை பரம ஏகாநதியாய முக்தி பெறுவதறகுச காரணஙகளா யிருக்கும அன்றியும ஒரு பெண் ஒருவனுககு வாழக்கைபபட்ட பதிவரதை என்பதை அவள அணிநதுளள

மாங்கல்யம், மூக்கணி, வளையல் முதலிய ஆபரணங்களை உணர்த்துவது போல இந்த ஐவகையான ஸமஸ்காரங்களான ஆபரணங்களும் இவ்வாத்மா பரமாத்மாவுக்கே சேஷப்பட்டவன், பிற தெய்வங்களுக் குரியவனல்லன் என்பதை யுணர்த்தும் அடையாளங்களாம் ஆகையால், முமுக்ஷுவான சேதனன ஆசாரயன மூலமாக இப்பஞ்ச ஸமஸ்காரங்களைப் பெற்று ரஹஸ்யத்ரயங்கள் மூலமாக ஸ்வரூப யாதாத்ம்யங்களான அநந்யார்ஹ சேஷத்வம், அநந்ய சரணத்வம், அநந்ய போகயத்வங்க ளென்னும் ஆகார த்ரய சம்பந்நனாக வேண்டும்

**தாபம்** —இவற்றில் முதல் ஸம்ஸ்காரம் தாபஸமஸ்காரம். ஆசார்யனாலே மந்த்ரபூர்வமாக வளர்க்கப்பட்ட யாகாக்னியிலே தபதமான (உஷ்ணமாக்கப்பட்ட) சக்கரப் பொறியை வலப் புஜத்திலும், சங்க சிந்நத்தை இடப புஜத்திலும் பொறிக்கப்படுகை

பகவ தாஜ்ஞாரூபமான வேதங்களிலும் சாஸ்த்ரங்களிலும் விதிக்கப்படுகையாலும் கண்ணனெமபெருமான துவாரகையிலிருந்து கார்யாரத்தமாக புறப்பட்டருளியபோது திருவாசல் காப்பார், "தேவரீர மீண்டெழுந்தருளுந்தனையும அரணமனையில பிரவேசிககத் தக்கவா ஆர்? பிரவேசிக்கத் தகாதவா ஆா?" என்று வினவியபோது கண்ணன், "திரும்பி வருமவரை சக்ராங்கித முள்ளவாகள் புகத் தக்கவர்கள; சக்ராங்கித மில்லாதவாகள் புகத் தகாதவர்கள்" என்று அருளிச செயகையாலும் சக்ராதிதாரணம் எம்பெருமானுக்கு அத்யநதாபிமானம என்பதை அறியலாம,

அன்றியும "பொங்கும பரிவாலே பெரியாழ்வார் என்று பேர் பெற்ற பட்டர்பிரான்

"தீயிற் பொலிகின்ற செஞ்சுடராழி திகழ திருச்சக்கரத்தின்
கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்று குடிகுடி
யாட செயகின்றோம்"

என்றும், "என்னையும் என்னுடைமையையும் நின் சக்கரப்
பொறி ஒற்றிக்கொண்டு

நின்னருளே புரிந்திருந்தேன்"

என்றும் முதலிலும் முடிவிலும் அருளிச் செய்கையாலும், பெரிய பெருமாள் தொடங்கி மணவாளமாமுநிகள் வரை யுள்ள சத்சம்பரதாய சித்தர்களான பூர்வாசார்யர்களும், நம்மாசார்யா பாயந்தரரான பின்புள்ள ஆசார்யர்களும் சகராங்கித பூர்வகமாகவே உபதேசிக்கையாலும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு சக்ராதி தாரணம் பரம உத்தேஸ்யம், அத்யாவசியம் என்று அறியவேண்டும்

சகல ஜாதியினரும் சகல மதத்தவர்களும் ஆதிகாலம் தொடங்கிக் குழந்தைகளுக்கு ரக்ஷையாக ஐம்படைத் தாலி (பஞ்சாயுத ஆபரணத்தை) அணிவித்து வந்தார்கள் என்பதை சங்க இலக்கியங்களிலும் காணலாம்

**புண்ட்ரம்** —இரண்டாவது ஸம்ஸ்காரம் புண்ட்ரமென்பது நெற்றி முதலிய இடங்களில் இடப்படும் ரேகை இது வராஹப்பெருமான் திருமேனியிலிருந்து உண்டான வெண் மண்ணினால் ஊர்த்வாகாரமாக (மேல் நோக்கி) அணியப் படுவது நெற்றி முதல் பன்னிரண்டு இடங்களில் முதன் முதலில் ஆசார்யர் திருக்கையினால் இடப்பட்டுப் பிறகு ஆயுட் காலமெல்லாம் தரிக்கவேண்டும். ஊர்த்வமுகமாக இடப்படுவதாலும், தன்னைத் தரித்தவர்களை ஊர்த்வலோக மாகிய பரமபதத்தை அடைவிப்பதனாலும் இது ஊர்த்வ புண்ட்ர மென்று பேர் பெற்றது இது ஹரியினுடைய பாதாகாரமாக அணியப்படும் நெற்றி முதல் பிடரியீறாகப் பன்னிரண்டு ஸ்தானங்களில் இடப்பட்டு கேசவன் முதல் தாமோதரன் ஈறாக உள்ள பன்னிரு வ்யூக மூர்த்திகளால் அதிஷ்டிக்கப்பட்டு ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ரக்ஷகமாக விளங்குவது. அதனாலேயே திருமண்காப்பு என வ்யவகரிக்கப்படுகிறது

புண்ட்ரங்கள் அர்த்த சந்த்ராகாரம், வட்ட வடிவம், நாயக புண்டரம (குறுக்காக இடுவது) எனப பலவகையாய் இருந்தாலும, தாமசாஸ்தரஙகள ஊாதவபுணடரததையே பெரும்பாலும விதிககினறன மறற புண்டரஙகள வேறு வேறு பலனகளைத தருபவை ஊர்த்வபுணடரம் மோக்ஷ பலனைத் தருவது. எனவே மோக்ஷாாததிகள வெண் மண்ணிலான ஊர்தவ புண்டரததையே தரிததல வேணடும. சிதரோாதவ புணடரமாக அதாவது நடுவில இடைவெளியிடடுத தரிககவேண்டும நாசியின் மேல பாகததில் புருவங்களின மததியில் ஓரங்குலம பாதபீட மிட்டு அணியவேணடும் நடுவில் பிராட்டிக்கு உகபபான மஞசளாலான சிவந்த ஸ்ரீசூர்ணம் தீபாகாரமாக இட வேண்டும. பாதபீடத்தில திருவநநதாழவாா, ரேகைகளின் நடுவில் பகவான, ஸ்ரீசூாணத்தில பிராட்டி சந்நிதி பணணு வாாகள. ஆதலால திருமண்காபபு பரணவஸ்வரூபம.

நாம ஸம்ஸகாரம —ஆதமாக்கள அனைவரும் ஸவாபாவிக மாகவே (இயல்பாகவே) பரமாதமாவுககு அடிமைபபட்ட வர்கள அதனை உணாததததான சகல வேதச் சுருககமான ப்ரணவம முநதுற அகாரததாலே சேஷதவததை (அடிமை யை)ச சொலலிப பிறகு மகாரத்தாலே ஆதமாவின ஜஞாத ருதவததைச் (அறிவுடையனும தன்மை) சொலலுகிறது. இந்த ஜ ஞ ா ன ம இலலாமையாலே முனபெல்லாம பாவாடை, அமாவாசை, பூஞசோலை எனறிபபடி கணட பெயர்களைத் தரிததிருபபாாகள் அதனை நீககி பகவானுககு அடிமை என்பதைக குறிக்க பகவந நாமத்தை ராமதாசன, நாராயணதாசன், மாதவதாசன எனறிபபடி பகவந நாமங களைத தரிககை

ஆணடானுடைய நாமததை அடிமை தரிககவேணடு மென்று சாஸ்தர நியதியும உலக வழக்கும உணடு இப்படி பகவந நாமமேயனறித திருததிப பணிகொணட ஆசாாய நாமததைத தரித்தல வேணடும அநத ஆசார்ய ஸதா னம் ஸ்ரீ ராமாநுஜாககே உரியதொன்று ஆகையினாலே

பகவந்நாமத்தோடு கூட ராமாநுஜ நாமத்தையும் சேர்த்து நாராயண ராமாநுஜதாசன், கிருஷ்ண ராமாநுஜதாசன் என்று இப்படி ஆசார்யனாலே தாஸ்ய நாமம் சூட்டப் பெறுகை நாம ஸம்ஸ்காரமாகும்.

எல்லாம் விட்ட ஏகாந்திகள் கிராமத்தால், ஜாதியால், குலத்தால், தொழிலால் வரும் பெயர்களைத் தரிக்கலாகாது; அது அநர்த்த ஹேதுவாகும். பகவந் நாமங்களாலேயே வ்யவஹரிக்கப் படவேண்டும். ஏனெனில் அவர்களுக்கு எல்லாம் அந்த விஷ்ணு தானே!

**மந்த்ர ஸம்ஸ்காரம்** — மந்த்ரத்தாலே சுத்தி பெறுகை மந்த்ர ஸம்ஸ்காரம். அதாவது ஆத்மா உஜ்ஜீவிப்பதற்கு அறிய வேண்டிய அர்த்தங்களை யெல்லாம் அறிவித்துத் தன்னை யநுஸந்திக்கின்றவர்களை ரக்ஷிக்கின்ற பரம ரஹஸ்ய மான மந்த்ரத்தை ஆசார்யனாலே உபதேசிக்கப் பெறுகை. ஆசார்யன் சிஷ்யனைத் தன் வலப்பக்கத்திலே இருத்தி சிஷ்யன் சிரஸிலே தன் வலக்கையை வைத்து வலக்காதிலே உபதேசிக்க சிஷ்யன் அதனை அப்படியே திரும்பச் சொல்லி உபதேசம் பெறுகை.

அம் மந்த்ரம் மூன்று அவை:—(1) எட்டு எழுத்துகளும் மூன்று பதங்களாக உள்ள **திருமந்த்ரம்.**

(2) இரண்டு வாக்கியங்களாய், ஆறு பதங்களாய், பத்து அர்த்தங்களாய், இருபத்தைந்து அக்ஷரங்களாய் அமைந்துள்ள **த்வய மந்த்ரம்.**

(3) மாயன் அன்று ஐவர் தெய்வத்தேரினில் செப்பிய கீதையின் சாரமான சரமச்லோகம். இது பதினொரு பதங்களாய முப்பத்திரண்டு அக்ஷரங்களாய் இருக்கும்.

இவற்றை ஆசார்யன் உபதேசத்தாலே அறிக.

**யாக ஸம்ஸ்காரம்** — யாக மென்பது ஒருவன் ஒரு தேவதையைக் குறித்து ஒன்றைச் சமர்ப்பிக்கை. இது ஆராதனம் எனப்படும். யாகங்கட் கெல்லாம் போக்தா

(புஜிப்பவன்) நாராயணனே ஆராதனங்களில் மிகச் சிறந்தது விஷ்ணுவின ஆராதனமே ஆதலால் அனைவராலும் ஆராதிககப்பட வேண்டியவனுன பகவானை ஆராதிக்கும் தகுதியை ஆசார்யனிடமிருநது பெறுகை. அதாவது ஆசார்யன் திருக்கைகளால் பகவானுடைய விகரஹம், சித்ர த திருமேனி, ஸ்ரீசாளகிராமம் திவய தேசத்து எம் பெருமான்களின் திருவடி நிலை, அபயஹஸ்தம் போன்ற வற்றில ஏதேனு மொனறைப பெற்று நாள்தோறும் ஆராதிக்கை இவை கிடையாதபோது ஆசார்யன் திருவடி நிலையாகிலும் பெற்றுத் திருவாராதன யோக்யதையை லபிகக வேண்டும பிறகு வாய்ததபோது எமபெருமான திருமேனி பெறறு ஆராதிககலாம் இபபடி முமுக்ஷு பஞ்ச ஸம் ஸ்கார சமபந்நனுக வேண்டும்

## ரஹஸ்யத்ரயம்

பஞ்ச ஸம்ஸ்கார சம்பந்நனை முமுக்ஷு ரஹஸ்யதர யார்த்த ஜ்ஞானம் பெறவேணடும் "முமுக்ஷுவுககு அறிய வேண்டிய ரஹஸயம் மூனறு" என்பது ஸ்ரீமத் பிள்ளை லோகாசாாயர் நியமனம்.

ரஹஸ்யதரயம எனபது திருமநதரமும, தவயமும, சரம ச்லோகமும ஆகும. இவறறில முதலில் அறியவேணடிய ரஹஸ்யம திருமந்தரம. முதலில நமமை நாம் அறியவேண் டும். நமமை நமககு உணாததுதலாகிற ஸ்வரூப சிக்ஷை பண்ணித் தருவது திருமந்தரம ஆகையாலே முதல ரஹஸ் யம் திருமந்தர மாகிறது

## திருமந்த்ரம்

இது சகல வேதசாரம் ஆத்மாக்களுக்கு மூனறுவித ஸ்வ பாவங்களுண்டு. இவை ஆகாரத்யம் எனபபடும அவை அநந்யாாஹ சேஷத்வம (நாராயணனுககே அடிமைப் பட்டிருத்தல்). அநந்ய சரணதவம் (அவனையே உபாயமாகக் கொளளுகை) அநந்ய போக்யத்வம (நாராயணனுக்கே

தான் அநுபவிக்கப்படுகின்றவனும் இருக்கை) அதாவது தான் செய்கின்ற சகல கைங்கர்யங்களும் தனக்கு இன்ப மென்றிருக்கை யன்றிக்கே, தனக்கும் அவனுக்கும் என்றி ருக்கை யன்றிக்கே அவனுடைய இன்பத்துக்கென்றே செய்கை. இவ்வாகாரத்ரயத்தை யறிவிக்கின்ற திருமந்த்ரம் அர்த்த பஞ்சகத்தையும் உணர்த்துகிறது ஆகையாற் ப்ரதம ரஹஸ்யமாகிறது.

## திருமந்த்ரத்தின் தோற்றம்

இப்படிப்பட்ட பரமார்த்தங்களை யறியாதே சம்சாரிகள் பகவத் கைங்கர்யத்தை யிழந்து பிறவிப் பெருங்கடலுள் அழுந்தி நோவு படுவதைக் கண்ட சர்வேச்வரன் தன் கிருபை யாலே இவர்கள் தன்னை யறிந்துய்யும்படி பரம ரஹஸ்ய மான இத்திருமந்த்ரத்தை நாராயண ரிஷி யென்னும் தாம தேவதையின் பிள்ளையாகப் பிறந்து தன்னுடைய அம்சமான நரன் என்னும் ரிஷிக்குப் பதரிகாச்ரமத்திலே உபதேசித் தருளினன்

ஆசார்யன் விஷயத்திலே சிஷ்யன் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும் என்னும் சிஷ்ய லக்ஷணத்தை அறியாத உலகத்துக்கு அதனை அறிவிக்கைக்காகத் தானே சிஷ்யனு மாய் நின்று உபதேசம் பெற்று அநுஷ்டித்துக் காட்டினன்.

இத்திருமந்த்ரம் சகல பலன்களையும் கொடுக்கவல்லது. ஜப ஹோமங்களாலே கார்யம் கொள்வார்க்கு அவர்கள் விரும்பிய பலன்களைக் கொடுக்கும் அர்த்த ஜ்ஞானத்தோடு அநுசந்திப்பார்க்கு ஸ்வரூப ஜ்ஞானத்தைப் பிறப்பித்துப் பரம புருஷார்த்த மோக்ஷத்தைக் கொடுக்கும்.

## எழுத்தும் பதமும்

எட்டுத் திருவெழுத்துக்களாய் மூன்று பதங்களாக இருக்கும் இதில் முதல் பதம் 'ஓம்' என்னும் ப்ரணவம். நடுப்பதம் 'நம' என்னும் பதம் மூன்றும் பதம் 'நாராய ணாய' என்பது.

ஓம் என்பது ஓரக்ஷரம். நம என்பது இரண்டு அக்ஷரங்கள் நாராயணாய என்பது ஐந்து அக்ஷரங்கள். ஆகத் திருமந்த்ரம் எட்டு அக்ஷரங்களை யுடையதாகிறது முதலில ப்ரணவமும், பிறகு நமப் பதமும், முடிவில் நாராயணாய பதமும உச்சரிக்கப்படும

## ப்ரணவம்

ப்ரணவம விரியாத நிலையில ஓரெழுத்தாய ஒரு பதமாய ஓராத்தத்தை உணாததும். விரிந்த நிலையில் மூன்றெழுத்தாய மூன்று பதமாய மூன்றாத்தத்தை யுணாததும்.

ப்ரணவம விரியுமபோதும அ', 'உ', 'ம' என்னும மூன்றெழுத்துக்களாக விரியும. பகவானுடைய சங்கல்பததாலே ருக வேதத்திலிருந்து பூ: என்னும ஒரு சப்த விசேஷம தோன்றியது யஜுா வேதத்திலிருந்து புவ என்னும ஒரு ஒலிச சிறப்பு உண்டாகியது ஸ்வ. என்னும சப்த விசேஷம் சாம வேதத்திலிருந்து பிறந்தது இவற்றையே வ்யாஹ்ருதிகள் என்பா

பொறகொல்லன் மூன்று பொற்கட்டிகளை ஒன்று சேர்த்து உருக்குவது போல பகவான் தன சங்கல்ப சக்தியாலே இமமூன்று வயாஹ்ருதிகளையும ஒன்றாகக் கலந்தான அதிலிருந்து அ, உ, ம் என்னும மூன்று எழுத்துகள் தோன்றின இறைவன இமமூன்றையும் ஒன்று சேர்த்தான் அது ஓம் என்றாயிற்று ஆகையால இப்ரணவம் சகல வேதசாரம,

## அகாரார்த்தம்

அகாரம் பகவானாகிற நாராயணனுக்கு முதல் திருநாமம. அகாரம எழுத்துக்களுக் கெல்லாம காரணமாயிருக்கும் ஆகையால, சகல ஜகத்துக்கும காரணனான நாராயணனை உணர்த்துகிறது. அகாரம ரக்ஷணார்த்தமான 'அவ' என்னும் வோச் சொல்லிலிருந்து தோன்றியது ஆகையால் அகாரத்தின் பொருளான நாராயணன் சர்வரக்ஷகன் என்பது பெறப்படும்

இவ்வகாரத்தில் நான்காம் வேற்றுமை தொக்கி
நிறகும. இதன விரிவான நாராயண பதம ஆய என்னும
நானகாம வேறறுமையோடு கூடியிருககிறபடியாக நாரா
யண பதததின சுருககமான அகாரததிலும நானகனுருபு
மறைநதிருகக வேணடும்; மறைநது நிறகும நானகாம்
வேறறுமைக்குப பொருள சேஷதவம (இஷடப்படி பயன்
படுததிககொளள உரியது) அதாவது அகாரப் பொரு
ளானவனுககு மகாரப பொருளான ஜீவாத்மா உரியவன
எனறபடி

உகாரார்த்தம

உகாரம் ஏவகாரததின ஆதேசததிலே வநதுளளது
ஏவகாரம என்பது தமிழில 'ஏ' எனபது போனறது வேத
வாககியஙகளிலே 'ஏவ' எனறு வருமிடஙகளிலே
உகாரம ப்ரயோகிககப்படடிருககிறது அதுபோல
இஙகும் உகாரத்தை ஏவகாரமாகக் கொளளவேணடும.
அதாவது மகாரத்துககு ஆததமான சேதனன அகாரப்
பொருளான நாராயணனுககே சேஷம எனறபடி.

ஏவகாரததுககு இருவிதமான பொருள உணடு. ஒரு
வஸ்துவுககுச சொல்லபபடும பணபு அவவஸதுவுககு இலலை
யெனபதிலலை, உணடு எனபது உதாரணமாக ராமன
விலலாளியே எனபதைப போலச சொலலச சொலலப்பட்ட
பணபு அவவஸ்துவைத தவிர மறற இடததில இலலை
யெனபது மறறொரு பொருள ராமனே விலலாளி எனபது
உதாரணம் முதல் உதாரணததில ராமன விலலாளி தான
எனறும, இரணடாவதில ராமனைத தவிர வேறு விலலாளிக
ளலலர என்றும் பொருளபடுதல காணக. இதனால
மகார வாசயனான ஆதமா அகார வாசயனான நாராயண
னுககே சேஷபூதன மறறவாகடகு உரியவனலலன என்று
அநய சேஷததைக கழிககிறது

லக்ஷ்மியை பகவான திருமார்பில தரிக்கின்றான் ஆகை
யால் பிராட்டிக்கு 'உ' என்று திருநாமம் அத
னால் பெருமானுக்கும பிராடடிககும ஆத்மா அடிமை

எனகிறது என்றும் கூறுவதுணடு. அது முக்கியமனறு பிராட்டிககு அடிமை எனபதிலும பிறாககு அடிமை அல்லன எனபதுதான மிக முககயமாக அறியவேணடிய ஆததம பிராட்டிககு அடிமையெனறு தனிததுச சொல்ல வேண்டா பெருமாளுக கடிமை எனறதனுலேயே பிராட்டிக கடிமையெனபது தானே கிடைக்கும, ஒருவன ஒருவனுக்கு அடிமைப்படடால அவனுடைய பாாயைககும அடிமை செயவது உலகியறகை.

### மகாரார்த்தம

அகாரததில் நானகாம வேறறுமையால சொலலபபடட சேஷதவததுச்கு ஆசாயம (உறைவிடம) யாா? எனருல் அநத சேஷதவ தாமததை உடையவன ஆதமா எனறு அறிவிகக வநதது மகாரம

மகாரம் 'மந' எனற தாதுவிலே தோனறியது, இததாதுவுககு (வேர்சசொல) ஜஞானம ஆததம இதனுல் ஆத்மா ஜஞானமயன், ஜ்ஞான ஸவரூபி என்றதாயிற்று 'மநு' என்ற தாதுவும் மகாரத்துககுக காரணம இத்தாதுவுக்கு அறிதல எனறு பொருள இததால் ஆத்மா அறிவுடையவன, அறிபவன என்ற பொருள கிடைக்கும்

†க வர்ச்கம்—க முதல் ங வரையுள்ள ஐந்து எழுத்துகள் பஞ்ச பூதங்களுக்கு வாசகங்கள் ச வர்ககம—ச முதல ஞ வரை மெய, வாய, கண், மூக்கு, செவி ஆகிய பஞ்ச இந்தரியங்களைக் காட்டும் ட வாக்கம—ட முதல ண வரை சபத ஸ்பர்ச ரூப ரச கநதம ஆகிய ஐம்புலனகளைக் காடடும் த வர்ககம—த முதல் ந வரை வாக பாத பாணி பாயு உபஸ்தம ஆகிய ஐநது கர்மேந்திரியங்களை உணர்த்தும, ப[1] மனசையும, ப[2] அஹங்காரததையும், ப[3] மஹததையும, ப[4] ப்ரக்ருதியையும் அறிவிக்கும இபபடி 24 எழுதது களும் 24 தத்வங்களுக்குப் பெயா.

---

†க வர்க்கம் என்ருல், தமிழில க எனனும ஓா எழுததின உச்சரிப்புக்கு சம்ஸக்ருதததில 4 விதமான உசசரிபபுகளும

மகாரம் இருபததைந்தாம எழு து. இதனுல் இருபத்து நான்கு தத்வஙகளான பரக்ருதியைக் காட்டிலும இருபதனைந்தாம் ததவமான ஆத்மா விலக்ஷணன, வேறு படடவன் என்றதாயிறறு. ஆதமா 'ஜஞாதா' அறிபவன் எனறதனுல் கர்ததா, போக்தா எனபதும பெறபபடும. இதனுலும ப்ரக்ருதியின் வேறுபட்டவன எனபதாலும் ஆனந்தத்வமும் பெறப்படும்:

ஆத்மாவுக்கு ஜஞானுனந்தங்களைக் காட்டிலும சேஷத்வமே முக்கிய லக்ஷணம். அதனுல தான முனனே அகாரத்தாலே சேஷத்வம் சொலலிப் பிறகு மகாரததாலே ஜஞானுனநதங்களைச சொலலுகிறது திருமந்தரம புஷபததுககு மணம போலவும, ரதனத்துக்கு ஒளி போலவும ஆதமாவுககு சேஷத்வம பெருமை தருகிறது.

ஆக பரணவததால ஜீவாதமா பரமாதமாவுக்கே அநந்யார்ஹ சேஷபூதன எனறு இருவாக்குமுள்ள உறவு சொலலப்படடது

## நம பதார்த்தம

நம எனபது ந, ம எனறு இரு பதங்கள் சேர்ந்த ஒரு பதம் ம எனபது ம் என்னும ஆத்ம வாசகமான எழுததின ஆறும் வேறறுமை ஆதமா தனக்குரியவன எனறபடி 'ந' எனறு அதனைத தவிாககிறது. எனககு நான உரியவனல்லேன் என்றபடி அகாரததில சேஷதவத்தால அஹங்காரத்தைக் கழித்தது, நமப பதத்தால் மமகாரத்தைக் கழிககிறது இவவிரணடும தான் ஆத்மாவுககு விரோதி, சம்சார விருக்ஷத்திற்கு விதை.

---

4 விதமான எழுத்துகளும உணடு. எனவே க வாககததைச் சோந்த 4 சமஸகருத எழுத்துகளும் ங எனனும் ஓர் எழுததும் சேர்ந்து 5 எழுத்துகள் ஆகின்றன இதற்கே க வர்க்கம – க முதல் ங வரையுள்ள 5 எழுததுகளென மேலே குறிப்பிடப்படடுள்ளது. இவவாறே ச வாககமும, ட வாககமும, த வாக்கமும, ப வாககமும் எனக கொள்க

உகாரத்தால் அநயசேஷத்வம கழிக்கப்படடது நமஸ் ஸால ஸவ சேஷததைதக கழிககிறது—பகவத சேஷதவத் துககு இசையாமையைக கழிககிறது

இந நமபபதம சபதத்தாலும ஆரததததாலும் உபா யத்தை அறிவிககிறது நாராயணனே உபாயமஎனபது நமஸ் ஸின பொருள விரோதியைக கழிககிற நமஸஸு காகததின ஒரு கணமணி இருபுறமும பார்ககுமாபோலே நடுவிலிருநது ப்ரணவததில ஸவரூப விரோதியையும, நடுவில் உபாய விரோதியையும, நாராயண பதததில கைங்காயமாகிற பலததின் விரோதியையும கழிககிறது

நமபபதமே ஸவரூபததையும், உபாயத்தையும, பலத தையும காடடும வணககமே ஸவரூபம், வணககமே உபாயம, வணககமே பலம எனறபடி

## நாராயண பதார்த்தம்

நாராயண பதம் நார+அயந எனப் பிரிக்கப்படும நார சபததிறகு அழியாத பொருளகளின் கூடடம என்று பொருள ர அழியும பொருளையும, நர என்று அதன் அழி வின்மையையும, நரா என்று அழிவில பொருளின பனமை யையும, நாரா அவறறின திரளகளையும காட்டும அவை எவை எனறால பரமபுருஷனின திவயாத்ம ஸ்வரூபம் தவிர அவன் திருமேனி தொடங்கி பிராட்டிமார் உட்பட உபய விபூதியிலுமுளள அனைததும நாரஙகளே அயந சப்தத் திறகு ஆதாரம் என்று பொருள் நாராயண பதம் ஆறும் வேறறுமைத தொகை நாரங்களுககு (நாரஙகளினுடைய) அயனம என்று விரியும் நாரஙகளுககெல்லாம அநதாயாமி யாய் வயாபிதது ஆதாரமாய இருபபவன எனறபடி.

இது இரண்டாம் வேற்றுமைத தொகைப் புறததுப் பிறந்த அன்மொழித் தொகையாகவும கொளளபபடும் அப்போது நாரங்களை அயனமாக உடையவன என்று பொருள் இது ஈசுவரனுடைய வெளி வ்யாபதியை அறிவிக் கிறது

வேற்றுமைத் தொகையால் இறைவனுடைய பரத்வ மும அன்மொழித் தொகையால சௌலபயமும (எளியனும தனமை) அறியபபடும

## ஆய பதாாததம

நாராயணுய எனபதில உள்ள ஆய பதம நானகாம் வேற்றுமை யுருபு நானகாம வேறறுமை பல பொருளகளில் வரும இங்கே பிராாததஙப பொருளில வநதுளளது நமப் பதம உபாயததைச சொனனபடியால அவவுபாயநதால பெறததசககது புருஷார்ததம (பலம) ஆகையால அப பலபராாததனையைச சொலகிறது

பரணவததில ஸவரூபம் சேஷதவம எனகையாலும, நமஸஸில உபாயம வணககம எனகையாலும பலம ஸவரூபததுக்கும் உபாயததுககும சோநததா யிருககவேண டும. ஆகையாலே இசசதுாததி (நானகாம வேறறுமை) அவ விரணடுககும சோநத அடிமையை—கைஙகாயததை பராாததிககிறது நமப பதம இககைஙகாயததில விரோதியைப போககுகிறது விரோதியாவது தனககாக— தனக்கினபமெனறு செயகை அவனது உகபபுககாகவே செயயவேணடு மெனறபடி

ஆகத திருமநதரததால சாவகாரணனுய சாவரக்ஷகனை எமபெருமானுககே உரியவனை நான சாவசேஷியான அநநாராயணனுககே எலலா அடிமைகளையும செயயப் பெற வேணடும எனறு பராாததிககுமபடி சொலலபபட்டது

## தவயாாததம

### தவய மநதர பரபாவம

திருமநதரததாலே ஸவரூப ஜ்ஞானம பெறற அதி காரிககு ஸவரூபாநுரூபமான உபாய ஜஞானமும, புருஷாாதத ஜஞானமும பிறசக வேணடுகையாலே அவ விரண்டையும அறிவிககினற தவய மநத்ரம அடிநதபடி யாக அநுசநதிககததககது

ஸ்ரீ விஷ்ணு லோகததில (காாய வைகுண்டத்தில்) சமசாரி சேதனர்களின உஜ்ஜீவனார்த்தமாக வினவிய பிராட்டிக்கு எம்பெருமான உபதேசிதத ஏறறமுடையது இதவய மநதரம கடவலலி யுபநிஷத்தில இரு வேறிடங களில உளள இரு வாசகியஙகளை ஒனருக இணைதது மந்தர மாககி சேதன உஜ்ஜீவனாாததமாகப பிராட்டிக்கு அருளிச் செயதான பெருமான.

உபாயம, உபேயம (பலம்) என்னும இரண்டு அர்த்தங் களையுடையதாய இரண்டு வாக்யங்களாக அமைநதுள்ளபடி யால இதறகு தவயம் (இரட்டை) எனறு பெயா ஆயிற்று. இது மநதரரதனம நயாசம, ப்ரபத்தி, சரணுகதி எனறும மறறும பல பெயாகளால் வழஙகபபடும்

இம மநதரததை நம் பூர்வாசாாயாகள மிக விருமபி எபபோதும அநுசநதிபபாாகள அதனுல் ஆசாாயாகள் விருமபி அஙகீகரிததது என்ற ஒரு ஏற்றமுமுணடு இதற்கு.

## த்வயத்துக கதிகாரி

இதர விஷயங்களில வரகதியும (வெறுப்பும்), பகவத் விஷயததில ரக்தியும (ஆசையும), பகவான நம்மை நிச்சயம அஙகீகரிபபான எனற உறுதியும உடையவனும் வாழநாளை வீணுககாமல உளள நாளகளில் திவய தேசங்களில் பற்று டையவனுயச கைங்காயபரனுய் பகவத் குணங்களை அநுபவிததுக கொணடு நறபோது போக்குதல் ஸ்ரீவைஷ் ணவாதிகாரிக்கு இருக்கவேணடிய பணபுகள. இபபடிப பட்ட அதிகாரி த்வய மநதரததுககுத் தகுதி பெறுமபோது மற்றும் இரு தகுதிகள பெறவேணடும அதாவது மற்றொரு தேவதையைத தஞ்சமாகப பறறுமையும, மற்றொரு உபாயததை அநுஷ்டிக்காமையும வேண்டும்

### வாக்யப பிரிவும வாக்யாாத்தமும்

இரணடு வாக்யஙகளாய, ஆறு பதஙகளாயப் பத்து அாத்தங்களை அறிவிபபதாயிருககும

1 ஸ்ரீமந நாராயண சரணௌ சரணம பரபத்யே.

2 ஸ்ரீமதே நாராயணாய நம

ஆக பூரவ வாகயம மூன்று பதஙகள். உததரவாக்யம் மூனறு பதங்கள்,

"பெரிய பிராட்டியோடு நிதயமாகக் கூடியிருக்கும் நாராயணனுடைய இரு திருவடிகளையும் உபாயமாகப் பற்றுகிறேன்" எனபது பூரவ வாக்யததின் பொதுப் பொருள்,

"பெரிய பிராட்டியோடு சோநத நாராயணனுக்கு எலலா அடிமைகளையும அஹங்கார மமகார மற்றுச செய் வேணுக வேணடும" எனபது உத்தர வாகியததின பிணடித மான அாததம.

விளககு உரை

ஸ்ரீ சபதாாத்தம்

ஸ்ரீ யெனறு பெரிய பிராடடிக்கு (மஹாலக்ஷமிக்கு)த் திருநாமம் இஙகு சொல்கிற ஸ்ரீ சபதம புருஷகாரததை (சோத்து வைததலை)க காடடுகிறது, (இஙகு பிராடடியைச சொலவது புருஷகாரததுககாக) ஈசுவரனுககும நமககும ஒழிக்க ஒழியாத சமபநதம நேரே இருககுமபோது புருஷ காரம எதறகு? நேரே ஆசரயிககலாகாதோ? எனற ஐயம ஏற்படலாம அதறகு விடை:

நாம் பிறபபுககளதோறும மிகப பல அபராதஙகளைச செயபவாகளாக உள்ளோம அவன தநதையாகையாலே நம்மைத் தணடிததுத திருதத முறபடுவன அபபோது அவன நம குறைகளைப பொறுப்பிதது ரக்ஷிக்கும்படி செயது சேர்தது விடுவதறகுப பிராடடி புருஷகாரம வேணடும இவள் நமககுத் தாய நம கிலேசம பொறுககமாடடாத மெனமைத தன்மையுடையவள, கருணையே வடிவானவள ஆகையால இவள புருஷகாரம் வேணடும அவனுககுப

பத்நியாய் அவனுக்குப பெருமை சோபபவளாய் இனியவளா யிருக்கையாலே அவனும் இவள் வாரத்தையைத தட்டாதே ஏற்றுக்கொள்வான்.

ஸ்ரீ சபதம் புருஷகாரத்துக்கு வேணடிய பணபுகளே யெல்லாம் காட்டும சேதனாகளால் ஆச்ரயிககப்படு மவள்; ஈசுவரனை ஆசரயிததிருக்கு மவள்; நம் முறையீடடைக கேட்கு மவள், ஈசுவரனைக் கேட்பிக்கு மவள், நம்மால சேவிக கப்படுபவள்; ஈசுவரனைச் சேவித்திருபபவள்; நம்முடைய தோஷங்களை அலலது ஈசுவரனுடைய சீற்றத்தை அழித் தொழிப்பவள் என்னும் இத்தனை பொருள்களையும் தாது பலததாலும வியுத்பததிகளாலும் (பொருள் விளக்கக் குறிப்புகளாலும) ஸ்ரீ சபதம் காட்டும்

**மதுப் அர்த்தம (மத் பதார்த்தம்)**

ஸ்ரீமத் எனபது பதம. மேலே நாராயண என்று 'ந'கரம வந்தபடியால் ஸ்ரீமந என்று 'த' கரம் 'ந'கரமாயிறறு இந்த மத் எனனும பதததிற்கு நிதயயோகம்—நிதய சம்பந்தம (என்றும் பிரியாதிருததல்) எனபது பொருள்

நாம குற்றமே புரியும தன்மை யுடையோம் அவன குற்றங் கணடு சீறித தணடிககும் இயல்புடையவன். இவ் விரண்டையும் அறிந்த இந்தத் தாய் நாம் அகன்றால் என் ளுகுமோ? என்று அஞ்சி, 'அகலகில்லேன் இறையும் என்று' அவன் மாரபிலேயே நித்யவாசம் பண்ணுவாள் என்கிறது மதுப் (மத என்பது)

ஆகையாலே சேதனர்கள் அவள் எப்போது சோந்திருப பாள் நாம ஆச்ரயிப்பதறகு என்று காலம பார்ககவேணடா, அவனுடைய சுவாதந்த்ர்யததையும தஙகள் குறறஙகளையும கண்டு அகலவேணடா, ருசி பிறநதபோதே ஆசரயிககலாம (அடையலாம்). இவள் புருஷகாரததாலே பேரபராதியான காகாசுரன் வாழ்ந்துபோனுன் என்பதறிக! இவளின் புருஷ காரச் சிறப்பை உலகுக்கு உணர்த்த வந்ததே ஸ்ரீராமாயணம.

## நாராயண பதார்த்தம்

நாராயண பதத்திலுள்ள நார சப்தமானது பகவானுடைய நித்யமான கல்யாண குணங்களைச் சொல்லுகிறது. அயண சப்தம் கல்யாண குணங்களுக்கு ஆச்ரயம் (ஆதாரம்) என்பதை அறிவிக்கும் இங்கு உபாயமாக ஆச்ரயிக்கும் சந்தர்ப்பமாகையாலே ஆச்ரயணத்துக்கு உதவிகரமான வாத்சல்யம், ஸ்வாமித்வம், சௌசீல்யம், சௌலப்யம், ஜ்ஞானம், சக்தி, ப்ராப்தி, பூர்த்தி முதலிய குணங்களைக் கொள்ளவேண்டும் (வாத்சல்யம் குற்றங்களைக் குணமாகக் கொள்ளும் குணம் ஸ்வாமித்வம் உடையவனாயிருக்கை சௌசீல்யம் உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு விகல்பமின்றி கலந்து பழகுகை சௌலப்யம் கிட்டுதற்குச் சுலபனாய (எளியனாய) இருக்கை இவனுடைய அபேக்ஷிதத்தையும் விரோதியையும் அறிகை ஞானம் இவனுடைய விரோதியைப் போக்கி விருப்பத்தைக் கொடுக்கைக்குரிய ஆற்றல் சக்தி இப்படி இவனுக்குச் செய்ய வேண்டியதற்குரிய சம்பந்தம் (உறவு) ப்ராப்தி இவனிடம் ஒன்றை எதிர்பாராமல் செய்து கொடுத்தற்குரிய நிறைவுடைமை பூர்த்தி எனப்படும் இவற்றையெல்லாம் உடையவன் நாராயணன் என்றபடி.

## சரணௌ சப்தார்த்தம்

சரணௌ இரண்டு திருவடிகளை, திருவடிகளைச் சொன்னது திவ்ய மங்கள விக்ரஹத்துக்கு உபலக்ஷணம் சரணௌ என்னும் த்விவசனம் (இருமைச் சொல்) சேர்த்தி யழகைச் சொல்லுகிறது.

அன்றியும் இருமையைக் குறிக்கும் இச்சொல் இரண்டுக்கு மேல் மற்றொன்றைச் சேர்த்துக்கொள்ளாது ஆகையால், எம்பெருமானையே உபாயமாகப் பற்றும் இந்த ப்ரபத்தி உபாயம் தன்னோடு மற்றொன்றையும் உபாயமாகச் சேர்த்துக்கொள்ள சஹிக்காது தானே நிரபேக்ஷ உபாயமாயிருக்கும் உபாய பூர்த்தியை அறிவிக்கிறது

### சரண சப்தார்த்தம்

சரணம் – உபாயமாக சரண சப்தம் வாசஸ்தானததை சொல்லுகையாலே இவவிடத்தில் உபாயததையே காட்டு கிறது. இஷ்டத்தைப் பெறுகைக்கும், விரோதிகளைக களை கைககும் தப்பாத உபாயமாக என்றபடி

### ப்ரபத்யே பதார்த்தம்

பரபத்யே—பற்றுகிறேன் (அடைகிறேன்). ப்ரபத்யே எனபது தன்மை யொருமை நான் பற்றுகிறேன எனபது பொருள. இதனுல் சரணம புகும அதிகாரியைச் சொல்லு கிறது. பர+பத்யே. ப்ர எனபது அடைமொழி பதயே எனபது அடைகொளி பர எனபது நனருக, திடமாக எனற படி அதாவது மஹாவிசவாச (திடமான நமபிக்கை) பூர்வ மாகப் பற்றுகிறேன் என்றபடி மற்ற உபாயங்களில் பற்றிலலாமல் அவற்றை யெலலாம விட்டுப் பற்றுகிறேன் என்றபடி

## நிகழ்காலத்தின் பொருள்

ப்ரபத்யே என்பது நிகழகாலத் தனமை யொருமை வினைமுற்று பரபததி ஒரு முறையே பண்ணவேண்டு மென்பது சாஸத்ரார்த்தம் ஒரு முறை ப்ரபததி பண்ணு வதையே (ஒரு அஞ்சலி பணணுவதைக் கூட) பெரிதாக அதிகமென்று நினைபபவன அவன். ஆகையால், ஒரு முறையே அமையுப

சிலர் ப்ரேமத்தின் மிகுதியால் பல முறை சரணம புகு வாரகள சிலர் தம குற்றங்களின கனததாலே கலஙகி ஒரே முறை ப்ரபததியின் பெருமையை அறியாமலே மறுமுறை யும் ப்ரபத்தி பண்ணுவா நற்போது போக்குககாக சதா அநுசந்திப்பாரும் இதன் இனிமையாலே எபபொழுதும அநு சந்திப்பாரும் உண்டு 'பற்றினேன்' என்று இறநத காலத் தால் இருந்தால் சாஸத்ராரததத்தோடு விரோதிசகும், ஆகையால் பற்றுகிறேன என்று நிகழகாலத்தில கிடக்கிறது.

இப்பற்றுதல் மனம், மொழி, மெய் எனும் முக்கரணங்களாலும் அமையலாம பலன் தருகைக்கு ஒவ்வொன்றே போதும். ஆயினும், ஞானத்தால மோக்ஷமெனறு சித்தாந்தமாகையாலும, அதயவசாயம் (நிச்சய புத்தி) வேண்டுகையாலும நிச்சய புததி வடிவமான மானசீகப் பற்றுதலே கொள்ளவேண்டும,

**உததர வாக்யம்**

சரணாகதிசகுப பல நியமமிலலே, சகல பலனகளையும் கொடுககும் அதனால கீழச்சொன்ன ப்ரபததி எந்த பலத்திற்கு என்றால் இன்ன பலத்திறகு எனகிறது உததர வாக்யம 'ஒழிவில காலமெலலாம உடனாய் மனனி வழுவிலா அடிமை செய்கை'யே கீழ்ச் சொன்ன உபாயததுக்குப பலம் என்கிறது அதாவது சரணாகதனை முமுக்ஷு அல்ப பலன்களை அபேக்ஷிசகாமல பகவத கைங்காயமாகிற பரம புருஷாாததததையே அபேக்ஷிக்க வேண்டுமென்றபடி. இருவருமான சேர்ததியிலே அடிமையை ப்ராாத்திக்கிறது உததர வாகயம

அவன உபாயமாமபோது தான புருஷகாரமாய் இருப்பாள அவன பராபயனாகுமபோது (பலரூபமாக அடையப் படுமபோது, கைங்காயம கொளளும்போது) தானும் ப்ராபயபூதையாய் இருந்து கைஙகாயத்தை ஏற்பதோடனறி, இவன கைங்காயததை ஒன்றுக்குப் பததாக அவன் திருவுளளத்தில படுத்தி உகப்பிததுக் கைங்கர்யத்தை வளாத்தலும் செயவாள

ஸ்ரீமதே—பெரிய பிராட்டியோடு கூடியிருநதுள்ளவனுககு பெரிய பிராட்டியோடு கூடியிருப்பவன இனனன் என்கிறது நாராயண பதம அதாவது கலயாண (மங்கள) குணங்களை உடையவன என்கிறது நார சபததிறகு அழிவற்ற நித்யமான குணங்கள் என்று பொருள அயந சப்தம் ஆதாரம என்னும் பொருள உணாத்தும கலயாண குணங்களுககு இருபபிடமானவன எனறபடி

உத்தர வாகயம் கைஙகாய ப்ரார்த்தனு ருபாமைக யாலே அடிமையாகிற கைங்காய பூர்வபாவியான அநுபவ விஷயமான வாத்ஸலயாதி ஸமஸ்த குணஙகளேயே நாரா யண பததத்திற்கு அர்த்தமாகக கொள்ளவேனடும்.

ரக்ஷணமாவது— விரோதியைப போககுகையும அபேக்ஷி தத்தை (விருமபியதை)க் கொடுககையும். இவற்றை யறிய ஜ்ஞானம வேணடும விரோதியைப போககி விரும்பியதைத் தர சகதி வேணடும சகதி யிருப்பினும் செய்து தருவதற்குச சம்பந்தம (ப்ராபதி) வேணடும இவனிடத்தில ஒனறையும எதிர்பாராமல செயவதறகுப பூாத்தி (நிறைவுடைமை) வேணடும இவறறை யெலலாம உடையவன எனகிறது நாராயண பதம இககுணஙகள எல்லாம பூாவ வாககியத தில் உபாயமாக அநுசநதிககப்பட்டது இங்கு பலமாக அநு சந்திக்கப்படுகிறது

## 'ஆய' என்பதன் அர்த்தம்

ஆய என்பது நான்காம் வேற்றுமை யுருபு இது ப்ரார்த் தனையைக் காடடும் அதாவது புருஷார்த்த (பல) ப்ரார்த் தனையைச சொலகிறது பலம—கைங்கர்யம் (அடிமைப் பணி). திருமநத்ரததில் சொல்லப்பட்ட சேஷத்வததையே (அடிமையையே) ஸ்வரூபமாக (இயல்பாக உடையவனுகை யாலே அந்த சேஷத்வ ஸ்வரூபத்துககுச் சேர்நத பலம் சேஷவ்ருததி (அடிமை செய்தல) ஆகையாலே அடிமையை ப்ரார்ததிக்கிறது

இவன் ப்ரார்த்திகக வேணுமோ? சர்வஜ்ஞன் இவன் நினைவை யறியமாட்டானோ? என்று நினைககலாம, பராாத் தித்துப பெறுவதே புருஷாாத்தம விருமபிய பெறுத ஒன்று பேறுகத் தோன்றுது. ஆசையாலே பராாததிககவேணடும்.

அன்றியும் நோய வாயப்பட்டுப பல நாளகள் உணவு கொளளாத குழநதை நோய நீங்கிப பசிககபபெற்றுச சோறு கேட்டால் தாய மகிழநது சோறூட்டுவாள்—அதுபோல.

ஐம்புல இனப வேட்கையாகிய நோயுற்ற ஜீவாத்மா அது தீர்நது பகவத கைங்காயமாகிற போஜனத்தை அபே க்ஷிததால் எவவுயிாககும தாயான எமபெருமான் திருவுள்ள முககும அவ்வுகபபே இவனுககுப பேறுகுமே

## 'நம' பதார்த்தம்

நம எனபது கைஙகாயததில களை யறுககிறது கைங்கர் யததுககுக களையாவது தனக கின்பமெனறு செயகை ம: எனறு எனசகுரிய தெனகிறது 'ந' என்று அதனை மறுக் கிறது. அதாவது நான செய்யும கைஙகர்யததின ப்ரயோஜ னம (இன்பம) எனக கனறிககே உனக்கே யாகவேணடும எனறபடி. இத்தால நான செயகின்றேன் எனற அஹங்கார மும, எனக கினபம என்ற மமகாரமும் கழிககபபடுகிறது.

"தனககேயாக எனைக கொள்ளுமீதே" எனனும திரு வாய்மொழிப பாசுரமும, "உனககே நாமாட் செயவோம் மறறை நம் காமஙகள் மாற்று" என்னும திருப்பாவைப் பாசுரமும இவவாததததை வலியுறுததும

---

## சரம ச்லோகார்ததம்

### தோற்றுவாய

இது பாரத யுதததிலே பந்துககளைக கொள்வது அதாமமாயிறறே எனறு அஞசிய அாஜுனனுக்குத் திருத் தோததட்டிலே பகவான கருஷணன அருளிசசெயதது.

தாமா தாமஙகளில் கலக்கமடைநத அர்ஜுனனின் கலககததைப போககப பலவறறைச் சொல்லி ப்ரசாங்காத் (ஒனறைப பற்றி வநத மறறொனறுக) மோக்ஷ பலததுக்குச் சில உபாயஙகளை (காம யோகம, ஞான யோகம், பக்தி யோகம முதலியவற்றை) உபதேசிததான் அதைக் கேட்ட பாாததன் 'அவை செய்ய அரியவை; ஜந்மாந்தரங் களில பலன் தருபவை, பரதநதர ஸ்வரூபத்துககுச சேரா தவை' எனறு சோகித்தான் அவனுடைய சோகத்தைப் போககுவதற்காக அநுஷடிக்க எளியதும், இப்பிறபபிலேயே பலன் தருவதும், ஸ்வரூபத்தோடு பொருந்தியதுமான

ப்ரபத்தி (சரணாகதி) உபாயத்தை இச்சுலோகத்தாலே உபதேசித்தான் கண்ணன்

இதற்கு மேல் சிறந்த இனனொரு உபாயமில்லை என்னும் படியான சரமமான (கடைசியான) உபாயத்தைச சொல்லு கையாலே இதற்குச சரமசலோக மென்று பேராயிருக் கிறது.

திருமந்த்ரத்துக்குச சாஸ்தரங்கள் விரும்பி அங்கீகரித்த பெருமை, ஆசார்யர்கள் உகந்த பெருமை த்வயத்துக்கு, நம்மால் பற்றப்படுமவனாகிய இறைவனே விரும்பி யருளிச் செய்தது என்னும் பெருமையுடையது சரமச்லோகம

இதனால் ப்ரபத்தி உபாய லக்ஷணத்தையும், உபாய பூதனான தன்னுடைய ரக்ஷண ப்ரகாரத்தையும் சொல் கிறான். இந்த உபாயத்தைத் தானே விரும்பி, ''மாமேகம் சரணம வ்ரஜ'' என்று நியமித்தலாலே இவ்வுபாயத்தில் தனக்குள்ள அபிமானத்தையும் வெளிப்படுத்துகிறான்.

## வாக்யார்த்தம்

எல்லாத் தர்மங்களையும விட்டு என்னையே உபாயமாகப் பற்று எனகின்றான் சுலோகத்தின் முற்பாதியாலே நான் உன்னை எல்லாப பாபங்களினின்றும் (விடுபட்டு) முக்தனும் படி பண்ணுவேன் என்கிறான் பிற்பாதியாலே

## 'சர்வ தர்மாந்' சபதார்த்தம்

சர்வ தர்மாந் எனபதில் தர்ம சபதம் உபாயத்தைக் காட்டும. இங்குச் சொல்லுகிற தாம சபதம மோக்ஷ பலத் தைச் சொல்லுகிறது தாமாந எனபது (பஹுவசனம) இரண்டாம வேற்றுமைப பலவின்பால் பெயர்சசொல் இப் பன்மை கர்மம், ஞானம, பகதி, திவ்ய தேச வாசம், திரு நாம சங்கீர்த்தனம் தொடக்கமான பலவகை உபாயங்களைச் சொல்லுகிறது சர்வ எனனும் அடைமொழியாலே இவ வுபாயங்களை அநுஷ்டிப்பதற்கு யோக்யதை (தகுதி)யை உண்டாக்குகின்ற வர்ண ஆச்ரம நித்ய நைமித்திக கர்மங் களைச சொல்லுகிறது (நித்ய கர்மம்—சந்த்யாவந்தனாதிகள்— நைமித்திகம்—சிராத்த தர்ப்பணாதிகள்)

## பரித்யஜ்ய

பரித்யஜ்ய என்றால் நன்றாக விட்டு என்று பொருள் "மாம் ஏகம் சரணம் வ்ரஜ" என்னையே உபாயமாகப் பற்று என்று விதிக்கிற உபாயத்துக்கு அங்கமாக விதிக்கிறது எல்லாத தர்மங்களையும் விட்டு என்று 'த்யஜ்ய' என்னும் ல்யப்பினாலே (விட்டு என்னும் வினையெச்சத்தால்) குளித்தே புஜிக்கவேணும் என்பது போல் விட்டே பற்றவேணும் என்கிறது

'பரி' என்னும் உபசர்கத்தால (வினையுரிச சொல்லால்) மீண்டும் அவற்றில தொடர்பு வாராதபடி ருசி வாசனைகளோடும செய்தத தகாததைச் செய்தோமே என்று லஜ்ஜையோடும் விடவேணும் என்கிறது

இங்குச் சொல்லுகிற காம த்யாகம ஸ்வரூப தயாகமன்று; அதாவது அடியோடு செய்யாமல் விடுதலன்று-புத்தி த்யாகம. அதாவது இவை உபாயம் என்ற எண்ணத்தையும் நான் செய்கின்றேன் என்னும எண்ணத்தையும விடுகை. வர்ணாச்ரம தர்மங்கள் பகவானுடைய ஆஜ்ஞையாகையாலே பகவத் கைங்கர்யம என்ற புத்தியோடு செய்தல்வேண்டும்

இந்த சாவ தர்ம பரித்யாக விஷயமாக இப்பொழுதுள்ள விவாதமெல்லாம வர்ணாச்ரம தர்மங்களைப பற்றியதாகவே உள்ளது மோக்ஷோபாயமான கர்ம ஜ்ஞான பக்திகளைப் பற்றியதாக இல்லை. கர்ம யோகாதி உபாயங்களைப் பற்றிய அறிவும், அவற்றை யநுஷ்டிக்கைக்குரிய ஆற்றலும அவ்வுபாயங்களுக்குரிய வர்ணங்களில் பிறந்தவர்களுக்கும இக்காலத்தில் இல்லை அதனால் அவற்றை அநுஷ்டிப்பவர்களும் யாருமில்லை. ஆகையால் அவற்றை அநுஷ்டிப்பதா? விடுவதா? என்ற வினாவே எழுவதில்லை. விடுவதா, பற்றுவதா என்ற வினாவெல்லாம் நித்ய நைமித்திக கர்மங்களைப் பற்றித்தான்

ச்ருதி, ஸ்ம்ருதிகளில் விதிக்கப்பட்ட இவை பகவானுடைய ஆஜ்ஞை (ஆஜ்ஞாரூபமான கைங்கரியம்). வர்ண

தர்மங்களான இவற்றை அவச்யம் அநுஷ்டித்தே தீர வேணடும் இவற்றை அநுஷடிப்பதற்குப் பலன கிடை யாது ஆனுல அநுஷடிக்காவிட்டால் குறறம உபாய ரூபங்களான கர்ம ஜ்ஞான பக்திகள் அபபடியலல. அநுஷ்டிபபதறகுப் பலனுணடு அநுஷடிக்காவிடில தோஷமில்லை. ஆஜஞாரூப மான வாண தர்ம நித்ய நைமித்திக கர்மங்களை யநுஷடித் தால ஈசுவரன திருவுள்ள முகக்கும ஆகையால் அது பகவத் கைஙகாயமாகிறது அதுவே இவனுககுப் பலம்

திருமாலை சமர்பபிக்கை, திருவிளக் கேறறுகை முதலிய னவும கைஙகாயந்தான், செய்தால் உகப்பான் ஆனுல அவறறைச செய்யாவிட்டால் சீறமாட்டான செயயாவிடில் குற்றமிலலை இவை யங்ஙனன்றிககே செய்யாவிடி சீற்றங் கொளவான. அதனுல் குற்றமாகும். ஆகையால் அநுஜஞா கைங்காயங்களான திருமாலை, திருவிளககு முதலியவறறைக் காட்டிலும ஆஜ்ஞா கைங்கர்யம் பிரதானம்; அவசியம் செய்யவேண்டியதாகிறது.

சர்வ சப்தத்திற்கு நித்ய நைமித்திக வர்ண தர்மங்கள் தானே பொருள்; அவற்றையும் விடும்படி தானே கணணன் அருளிச்செய்தான்; அவற்றை விடவேண்டாவோ? என்றுல் அவற்றை உபாய பாவத்தோடு செய்யலாகாது. உபேய (பல) மாகச் செய்யவேண்டும் உபாயம் என்ற எணணம் தால் துரும்பை எடுத்துப் போடவும் யோக்யதையிலலை பல மாக நினைக்கும்போது எதையும விட இயலாது

இனி உடமபெடுத்தவாகள ஒனறும செயயாமல் இருபபதெனபதும இயலாது உடமபோ பரகிருதி சம் பநதமான முககுணங்களோடு கூடியது. இநதரியங் களோ க்ஷணநேரமும வாளாவிரா ஏதேனும செய்து கொணடே யிருக்கக்கூடியவை மனமோ நினறவா நிலலாது எஙஙனே வாளாவிருகக முடியும? எவையே னும அசத காமஙகளைச் செயது அநாததபபட நேரும். இப்படிக் கெட்டழியாதிருககத்தான பரம காருணிகனை ஈசுவரன இவறறை விதிததுள்ளான். அன்றியும எசசெய

லேயும் செய்யலாகாதென்றால் நிற்றல், இருத்தல், எழு தல், நடத்தல் முதலியனவும, நீராடல், திருவாராதனம செய்தல், புஜித்தல் முதலியனவும் செய்யலாகாதே! அவையும் செயல்தானே?

நம் சம்ப்ரதாயத்தில் நம முன்னோர்களில் விட்ட அதிகாரிகளும சிலர் உண்டு விடாது அநுஷ்டித்தவர் களும் உண்டு. அப்படி விட்டவாகள் விடவேண்டும் எனனும் எண்ணம் ஏற்பட்டு விட்டவர்களல்லர். அவர் கட்கு அவை தன்னடையே விட்டுப் போயிற்று. பர மேகாந்திகளாய், மாற்பால் மனம் சுழிப்ப மற்றெல் லாம கைவிட்டவர்களாய், "வாசுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:" எனறு ஈசுவரனே கொண் டாடும்படி, 'உண்ணும் சோறு பருகுநீா தின்னும வெற் றிலேயும எல்லாம் கண்ணன்'' என்று பகவதநுப வத்தின் ஊற்றத்தாலே மற்றொன்றை அறியாத நிலே யடைந்தவர்கள் விட்ட அதிகாரிகள. இப்படிப பட்ட அதிகாரிகட்கு உறங்குகினறவனுடைய கையி லுள்ள பொருள் தானே நழுவுவது போலவும, புளிப் பழம பழுக்கப் பழுக்க மேலோட்டோடு பறறு விட்டுப் போவது போலவும தானே விட்டுப போகும்

செய்ய வேண்டுமா? விடவேண்டுமா? என்ற ஐயுறவு வந்தபோதே இவர்கள விடுதற்குரிய அதி காரிகள் அல்லர் என்பது தெளிவு விடவேண்டியவை எததனேயோ உள. அவற்றை யெல்லாம விடுவ தில்லே. விடக்கூடாதவற்றை விடத் தேடுகின்றார்கள். மனேவியிடததில் ஆசை விடுவதில்லே, மக்கள் பாசம போகவில்லே; பணத்தின் மேல் பற்று அறவில்லே; புலன படிந்துண்ணும் போகததில் நசை யறவில்லே; வேண டியவர், வேண்டாதவர் என்ற வேறுபாடு நீங்க வில்லே; இவ்வுலகில் பொருந்தாமை ஏதுமில்லே; அவ வுலகில் இனிப் போக ஆசையில்லே; நிலேமை இங்ஙன

மிருக்க அவசியம அநுஷ்டிக்கத தககவற்றை விடுமாறு எஙஙனே?

ஞான பக்தி வைராக்யங்கள் கைபுகுநதவனும் உலகததுககாகச செயதல வேண்டும ஏனெனில விடுவ தனுலே இவனுககுப பாதகமிலலாவிடினும, இததனே யதிகாரமிலலாத சாதாரண மககள எலலாம் தெரிநத இநத அதிகாரியே செயயவில்லையே? செயயத தேவை யிலலே போலும! நாம ஏன செயயவேணடும? என்று செய்யாதொழிவாாகள

செய்யா தொழிவரேல அது அவாகட்கு விநாசததை யுணடாககிவிடும அதறகுக் காரணம இநத ஞானி யாகை யாகையாலே, இவன விஷ்யததில ஈசுவரன திருவுள்ளம கன்றும (குறைபடும) அதுமட்டுமின்றிப பிறருடைய அநாததம கணடு பொறுசக மாட்டாமையாகிற வைஷ்ணவ லக்ஷண ஸவரூபஹானியு முண்டாம அவ்வழியாலே இவனுக கும அநர்தத மேறபடும நம பூாவாசாாயாகள பலரும இவ வழியாலே இவறறைக் கைஙகாய ரூபமாக அநுஷ்டிததாா கள் இப்படிப்பட்ட அதிகாரிகளேததான "கற்றுக கறவைக் கணஙகள் பல கறந்து' என்ற பாகரததில சூடிக்கொடுதத சுடர்ககொடி அருளிச் செயதாள

ப்ரபநநனுககுக் காம யோக முணடு, ஞான யோக முண்டு, பக்தியோக முணடு, ஆனுல உபாய மாகமாட்டா; இவனுடைய காமம கைஙகாயததிலே சேரும், ஞானம ஸவரூப விகாசததிலே (விகாசம=தெளிவு—விளககம)புகும பகதி பராபய ருசியிலே அநவயிககும (பலததில உளள ஆசையைக காட்டும) இபபடி யிவையெல்லாம் பலத் தோடே தலேககட்டும்.

"இவன் தான இவை தன்னே நேராக விட்டிலன் காமம கைஙகாயததிலே புகும, ஜ்ஞானம் ஸ்வரூபவிகாசத்திலே புகும; பக்தி பராப்ய ருசியிலே புகும" என்னும் பிள்ளே லோகாசார்யா ஸ்ரீசூக்திகளேக காணக

எம்பெருமானுர் வர்தக்யத்தால் மிகத் தளர்நத தசை யிலும் இருவர் பிடிததுககொள்ள எழுந்து சென்று ஆக்ய டரதானம பண்ணிஞர் என்பது குறிகமொள்ளத தககது

நன்கு பழுத்த கனி தானே காமபின பற்றறறு விழுவது போலே பகவத் விஷயத்தில் ஊற்றததாலே தாஞவே கர் மங்கள் விடுபட்டுடபோன அதிகாரிகளேயும, "கனைததிளங் கற்றெருமை" என்னும் பாசுரத்திலே ஸ்ரீ ஆண்டாள் அருளிச செய்தாள இந்நிலே எல்லார்க்கும் கூடுவதொன் றனறு

ஆகையால் நித்ய நைமித்திக ரூபமான வாணதாமஙகள் கைங்கர்யரூபமாக அவசயம அநுஷடிககத தக்கவை எனபது பெறபபடடது

## 'மாம்' சபதார்த்தம்

மாம = என்னே தன்னே உபாயமாகப் பறறச சொல்லும் இடமாகையாலே உபாயபூதனுககு இருகக வேணடிய அல்லது உபாயமாக ஆசரயிபபதற்குச சௌகாயமான குணங்கள் மாம எனற சொலலிலே பெறபபடும அவை யாவன வாதசலய சௌசீலய சௌலபயாதி குணஙகள. தர்மததை அதாமமாக நினேதத தோஷம பாராமல உப தேசிசகையிலே வாதசலயம் விளங்கும தன் மேனமையைப் பாராமல் 'கிருஷ்ணு' யாதவா!' எனறு அழைக்கும்படி கலந்து பரிமாறுகையாலே சௌசீலயம விளஙகும. அவன் ஏவின காரயம் செய்யுமபடி சுலபஞயத தேரோட்டுதல், தூது போதல் முதலியன செய்கையாலே சௌலபயம விளங் கும. அவன மறுதது அகன்ருலும விடமாடடாமல் திருத் திச் சேர்ததுககொணடபடியால சுவாமிதவம் விளஙகும்.

கீழ விடடசொனன உபாயங்கள சாத்யஙகள (சேதனஞல உண்டாககபபடுபவை ) அசேதனங்கள ( அறிவற்றவை) பலம் தரும சகதியற்றவை. மாம் எனற இவ்வுபாயம். சித்தமாய சர்வஜ்ஞமாய் சாவசகதியாய- இருக்கும் ஆகையால் நிர பேக்ஷ உபாயம்.

## 'ஏக' சப்தார்த்தம்

ஏகம் என்னும் இது அவதாரணார்த்தத்தில் வந்துள்ளது. அதாவது 'ஏவ' என்னும் பதத்தின் பொருளில் வந்துள்ளது. என்னையே என்றபடி. ப்ரபத்தி யுபாயத்தைச் சொல்லும் இடங்களிலெல்லாம் (வேத சாஸ்தரங்களிலும், அருளிச் செயல்களிலும்) ஏவ (ஏ)காரத்தை யிட்டே சொல்லப்பட்ட படியால இங்கும் ஏக சப்தத்துக்கு ஏவகாரார்த்தமே கொள்ளவேண்டும.

எனவே, ''சர்வதாமாந் பரித்யஜ்ய'' என்று உபாயாந் தரங்களை முன்பே கழித்து விட்டபடியால், மறுபடியும் என்னையே என்ற பிரிநிலை ஏகாரத்தால் பிரிக்கப்படுவதால் தான் (சேதனன்)பண்ணும ப்ரபத்தியும் உபாயமன்று என்று ப்ரபத்தியில உபாய பாவத்தைக் கழிககிறது

### சரணம்

சரணம்—உபாயமாக. விரோதி நிவ்ருத்தி பூர்வகமாக இஷ்ட பலத்தைப பெறுவதற்கு உபாயமாக என்றபடி.

### வ்ரஜ

வ்ரஜ—அடைவாயாக வ்ரஜ என்பது காயிக வாசிக மானசிகமாகிற மூவகை கதிகளையும் (அடைதலையும்) காட்டினாலும், மானசிகமாகப் பற்றுதலையே முக்கியமாகக் கொள்ள வேண்டும். புத்தி பண்ணு என்றபடி. ஆக, "'மாமேகம் சரணம் வ்ரஜ'' என்றதனால், 'நீ பண்ணும் சரணா கதியையும் உபாயமாகக் கருதாமல் என்னையே உபாயமாக நம்பு' என்றாயிற்று.

இவன் பண்ணும் சரணாகதி உபாயமன்றாகில் சரணா கதி பண்ணுமாறு விதிப்பானேன், தானே காரியம் செய்யலாமே? என்று நினைக்கலாகாது அதற்குச் சில காரணங்களுண்டு. இவன் அறிவுடையவ னென்கையாலே அறிவின் பயனான அபேக்ஷிதத்தைக் காட்டுகிறது. அநாதி காலமாக அவன் ரக்ஷணத்தைத் தடுத்துக்

கொண்டு வந்தவனுகையாலே அம்படித் தடை செய்யா மையைக் காட்டுகிறது. அநாதி காலமாக நம்மை சம் சாரத்தில் இட்டு வைத்தவன். இனியும அப்படிச் செய்யுமோ? என்று அஞ்சினால், ''நாம் சரண மடைந் திருக்கிறோம்; நம்மைக கைவிடான், ரக்ஷித்தருளவான்'' என்று சமாதானம பெறுகைக்கும், அவனே உபாய மானால் எலலாருககும் முக்தி யளிக்கவேணடாவோ? என்ற கேள்வி எழுந்தால், சரணம புகுந்தவனுககு முக்தி என்று பரிகரிப்பதறகும் பற்றும்படி கூறு கின்றான். ஆகையால் இநத ஸ்வீகாரம் உபாயமாகாது; அவனே உபாயம

அதாவது—இவன் அசேதன மனறு, அறிவுடையவன். அறிவின் பயனாகப் பலததை அபேக்ஷிகக வேணடுமே? அநாதி காலமாகத் தன் சுவாதந்தர்யத்தினால் அவனுடைய ரக்ஷண காரியத்தைத் தடுத்துக்கொண்டிருநதவனுகையாலே அப்படித் தடாமல் தன் இசைவைக காட்டவேண்டுமே? இத்தனைக் காலம் நமமை சமசாரதது விடடவன் இனியும அபபடிச செய்வனோ? என்று புத்தி கலங்கினால் அதறகுச் சமாதானம வேண்டுமே இப்படி இனனும் சில காரணங் களுக்காக உபாய ஸ்வீகாரத்தை விதிக்கின்றன ஆகையால இவன் பற்றும பற்று உபாயமன்று; அவனே உபாயம

## 'அஹம்' என்பதன் அர்த்தம்

இசசுலோகத்தின் முதற் பாதியாலே சரணம புகும அதி காரி செயயவேணடியதை அருளிச செயதான பிற்பாதி யாலே சரணயனை தான் செய்யும காரியததை யருளிச செயகின்றான.

அஹம—நான் ஆசிரிதனுசகு (வழிபடும பகதனுககு)ச் செய்யவேணடியவறறை அறிகைககுரிய ஞானம, விரோதி யைப போககி அபேக்ஷிததததைத் தரவலல சகதி, தன காரிய மாகச் செய்தற்குரிய ப்ராபதி—சமபநதம இககுணங்களெல

வீரம் அற்றம என்னும அஸமத் சப்தத்தில் தோன்றும. சர்வ ஜ்ஞனுய சரவசக்தனுய பராப்தனுன நான் என்றபடி

## 'த்வா' என்பதன் அர்த்தம்

தவா—உன்னை அஜ்ஞனுய் (உன் காரியத்தை யறியமாட்டாதவனுய), அசக்தனுய் (உன காரியத்தைச் செய்து முடிக்கும சக்தி யில்லாதவனுய), அப்ராப்தனுய(உன் காரியதன்தச் செய்து கொளளுதறகும உரிமையற்றவனுய) என்னையே யறறியிருக்கும உன்னை.

## 'சர்வ பாபேப்ய: ' சப்தார்த்தம

பாபேப்ய.—எல்லாப பாபங்களிலிருநதும். அதாவது என்னை யடைவ்தறகுத தடையாக இருப்பவையென்று நீ நினைககின்ற பாபங்கள் எல்லாவறறினின்றும். பாபேபய என்னும் பனமையாலே சாஸ்த்ரங்களில் விதிததவற்றைச் செய்யாமை, செய்யலாகா தெனறவறறைச் செய்தல், செய்தவை, செயகினறவை, இனிச் செய்யுமவையான பகவதபசார பாகவதாபசாராதிகளான காமங்களை நினைக்கிறது சாவ சப்தததாலே அஜஞான அந்யதா ஜஞான விபரீத ஜஞானங்கள், துரும்பு கிள்ளுதல், தினவு சொறிதல் போன்ற வாசனையாலே (பழக்கத்தாலே) செய்பவை, ருசி (ஆகாதது எனறறிந்தும விடமாட்டாமல விரும்பிச செய தல்), சரீர சமபந்தம முதலியவற்றைக கொள்ளவேணடு ம.

## 'மோக்ஷ யிஷ்யாமி'யின அர்த்தம்

மோக்ஷ யிஷயாமி—விடுபடுமபடி செயவேன். மோக்ஷ யிஷயாமி எனபது பிறவினை பறறி வந்த எதிர்காலத தனமை யொருமை வினைமுற்று, இதனுல உன பாப நிவருத்தியில் நீயும் முயலவேணடா, நானும முயல வேண்டா, என்னை சரண்புகுநத ராஜகுல மாஹாத்மயத்தாலே (அரச சம்பநதம பெற்ற ஒருவனைக் கண்டு அவனை நலிய வந்தவர்கள் அஞ்சி நிறபது போனறது) அவை தானுகவே விட்டுபபோம எனகிறு ன்

## மாசுச: என்பதன் அர்த்தம்

மாசுச.—சோகிக்க வேண்டா. உன் காரியத்தை நான் என் காரியமாக ஏற்றுக்கொண்டபடியாலே உனக்குச் சோகிக்கக் காரணமில்லையென்று சோக நிவ்ருத்தியைப் பண்ணுகின்றான் உன் பாபங்களை நான் பாபமென்று நினைத்தால் நீ சோகிக்கலாம் அவற்றை நான் புண்ணியமென்று நினைக்கும்போது உனக்கு சோகப்படக் காரணமில்லையே என்கிறான்

---

## நித்யாநுஷ்டான முறை

ஸ்ரீவைஷ்ணவர்கள் சதாசாரபரர்களாக ஒழுக வேண்டும் ஆசாரம் என்றால் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஞானேந்த்ரியங்கள் ஐந்தும், வாக், பாத, பாணி, பாயு உபஸ்தம் என்னும் கர்மேந்த்ரியங்கள் ஐந்தும், மனம் ஒன்றுமாகிற பதினொரு இந்தரியங்களின் சுத்தியையும் சரீர ஆத்ம சுத்தியையும் ஆசரித்தல்—அநுஷ்டித்தல் என்று பொருள்

பகவந் நிவேதனமல்லாத, உண்ணத் தகாத உணவுகளை உண்டு சுவைத்தல் வாய்க்கு (நாக்குக்கு) அசுத்தி. வீண் கதைகளைக் கேட்டு ரசித்தல் காதுக் கசுத்தி. ஆடையற்ற பெண்கள் போன்ற பார்க்கத் தகாதவற்றைப் பார்த்தல் கண்களுக்கசுத்தி பொய் பேசுதல், பிறர் மனம் புண்பட்ப் பேசுதல் வாக்குக்கசுத்தி பிறர் பொருளைக் கவர்தல், பிற உயிர்களை இம்சித்தல், கொல்லுதல் முதலியன கைகளுக்கசுத்தி. பிறர்க்குத் தீங்கு நினைத்தல், சிற்றின்பங்களிலே மனத்தை யீடுபடுத்தல் முதலியன மனத்துக் கசுத்தி இப்படிகளிலே கண்டு கொள்வது

சாஸ்தரங்களில் விதித்தபடி நடத்தலும் ஆசாரம் எனப்படும். அப்படி நடவாமை அநாசாரம் சாஸ்த்ரங்கள் ஆகாதென்று மறுத்தவற்றைச் செய்தல் துராசாரம் எனப்படும்

தாதி, உபதேச ரத்நமாலை முதலியவை முற்றுமாகிலும் முதலும கடைசியுமாகிலும சேவித்து (ஸ்தோத்ர ரத்நம், எதிராஜவிம்சதி முதலிய ஸ்தோத்ரங்களையும் சேவிக்கலாம்). தளிகை கண்டருளபபண்ணி அாக்ய கணடூஷ அர்க்ய பாதய அாகய ஆசமானீய அாக்யங்கள் சமர்ப்பித்துத திரு வொற்றுடை யொற்றி சய்யாசனம் சமர்ப்பித்து மாணிக்கம் கட்டி, மனனு புகழ்ப் பாசுரங்கள் சேவிததுத் திருக்காப்பு சோத்தல்வேண்டும.

பிறகு ப்ரசாதப்பட்டு கை, வாய், காலலம்பி ஆசமனம் செய்து படுககும்போது, 'கலலும் கனை கடலும்', 'பனிக் கடலில', 'அரவத்தமளி', 'அநநதன் பாலும்' பாசுரங்களைச் சேவிதது அநதாயாமிப் பெருமாளைத் திருக்கண் வளர்த்தி பகவத்யானததுடன் சயனித்துக் கண்ணுறங்க வேண்டும். வடககில் தலை வைததுப் படுககலாகாது (நிதயாநுஷ்டானம் திருவாராதனக்ரமம் அப்படியே அநுஷடிக்க முடியாவிட்டா லும் தன் சக்திக்குக் குறைவின்றி இயன்றரை அநுசந்தித்து அநுஷ்டிக கலாம்,)

(அதிகாலை ப்ராம்ம முஹூர்த்தத்தில எழமுடியாவிட்டா லும் சூாயோதயத்திற்கு முன் எழுந்திருத்தல் வேண்டும. சூாயோதயம் வரை உறங்குவது பாபம். ஆயுசும் ஆரோக்ய முமகுன்றும் )

பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடிவந்தென்
மனக்கடலில் வாழவல்ல மாயமணாள நம்பீ!
தனிக்கடலே தனிச்சுடரே தனியுலகே என்றென்று
உனககிடமாயிருக்க என்னை உனக்குரித்தாக்கினையே.

கலலும கனைகடலும் வைகுந்த வானாடும்
புலலென் றொழிநதனகொல் ஏபாவம—வெல்ல
நெடியான நிறங்கரியான உள்புகுநது நீங்கான்
அடியேன துள்ளததகம

அநநதன்பாலும் கருடன்பாலும் ஐதுநொய்தாக வைத்தென் மனநதனுள்ளே வந்து வைகி வாழச்செயதா யெம்பிரான்

நினைந்தென்னுள்ளே நின்று நெக்குக் கண்கள் அசும்பொழுக
நினைந்திருந்தே சிரமந் தீர்ந்தேன் நேமிநெடியவனே!

அரவத் தமளியினோடு மழகிய பாற்கடலோடும்
அரவிந்தப்பாவையுந் தானும் அகம்படி வந்துபுகுந்து
பரவைத்திரை பலமோதப் பள்ளிகொள்கின்ற பிரானைப்
பரவுகின்றான் விட்டுசித்தன் பட்டினம் காவற்பொருட்டே.

---

## ஸ்ரீவைஷ்ணவப் பெண்களின் ஒழுக்கம்

வைணவப் பெண்கள் பாத்தாவுக்கு முன் படுக்கை விட்டு எழவேண்டும் எழுந்து பாத்தாவுக்கும் பகவத் சந்நிதியிலும் தண்டம் சமர்ப்பித்து முன்கூறியபடியே ஜலமலங்கள் கழித்து சுத்தி (சௌசம்) பண்ணிக்கொண்டு பல் விளக்கி, வாய், கைகால் கழுவி ஆசமனம் செய்த பின் வாசலையும் பெருக்கி வாரிக் கொட்டிச் சாணநீர் தெளித்துச் சுத்தி செய்து கோலமிட வேண்டும் பாத்திரங்களைப் புளி, திருத்துழாய மண் அல்லது சாணம் கொண்டு தேய்த்துச் சுத்தம் செய்து கழுவிக் கவிழ்த்து வைத்த பிறகு ஸ்நாநம் செய்ய வேண்டும்

சுமங்கலிகள் நாள்தோறும் கண்டஸ்நாநம் செய்து மஞ்சள் பூசி மஞ்சள்நீரை சிரசில் புரோக்ஷித்து (தெளித்து)க் கொள்ளவேண்டும்

ஏகாதசி, அமாவாசையை, கரஹணம், அயநம் முதலிய புண்ய காலங்களிலும், சிராத்தம் முதலிய விரதோபவாச நாள்களிலும் சண்டாளா, மிலேச்சா, நாய், பன்றி, காக்கை முதலியவை தீண்டியபோதும், கணவனோடு கலவி ஏற்பட்ட காலத்திலும் சிரஸ்நானம் செய்தல் வேண்டும் சுமங்கலிகளும் அமங்கலிகளும் ஆடையின்றி ஸ்நாநம்பண்ணலாகாது. ஸ்நாநம் பண்ணிய பிறகு ஆசமனம் செய்து உலர்ந்த மடியாயுள்ள வஸ்தரத்தை உடுத்துத் திருமண் தரிக்கவேண்டும். பெண்கள் நாசியின் மேல் பாகத்தில் புருவங்களின் மத்தியில் சந்திரன் பிறைபோல் திருமண் (பீடம்) தரித்து அதன் மேல் தீபரேகை போல ஸ்ரீசூர்ணம் தரிக்கவேண்டும். திருமண்

இல்லாமல் வெறும ஸ்ரீசூர்ணம் மட்டும் தரிக்கலாகாது. திருமண், ஸ்ரீசூாணங்களை மற்றும் பதினோரிடங்களிலும் அவ்வவ் மநதரங்களோடு கைகாட்டிக் கேசவாதி பெருமாள் மநதரங்களாலும, ஸ்ரீதேவ்யாதி பிராட்டி மந்த்ரங்களாலும் அஞ்சலி பண்ணிக் கை கூப்பிககொண்டு வாக்ய குருபரம பரை, திருமநத்ரம், த்வயம, சரமஸ்லோகம, ஆசார்ய தனியன்களை யநுசநதிக்கவேணடும். பிறகு சுத்தி செய்த பாத்திரங்களில் தளிகைககும திருவாராதனத்துக்கும, தாகததுக்கும, வெளி உபயோகத்துககும தனிததனியாக தீர்த்தம் நிறைததுச் சுத்தம் செய்த இடத்தில மூடி வைகக வேணடுமெ. பிறகு சோதித்துக கவிழ்தது வைதத பாத்திரங களை நீர் விடடு நனகு அலமபிக் காய்கறி பதாாததங்களையும நன்ருகக் கழுவி எடுத்து வைதது அரிசி, பருபபு முதலியவற றையும சோதிததுத் திருப்பலலாண்டு, சிருபபாவை, ராமாநுஜ நூற்றந்தாதிகளை அநுசந்திததுக்கொண்டே தளிகை செய்யவேணடும்

திருவாராதனம, போஜனம முடிந்தபிறகு தாம்பூலம் தரித்துச் சந்தனம், புஷபம், கண்மை முதலியவற்ருல் தங் களை அலங்கரித்துக் கொள்ளவேண்டும். அமங்கலிகளுக்கு இவை ஆகா. ஆபரணங்களும் அணியலாகாது.

பூப்படைந்தால் (மாதவிலககு ஏறபட்டால்) மூனறு நாள்கள் (மூன்று இரவு கழியும்வரை) வீட்டில கலககாமல் மறைவிடத்தி லிருக்கவேண்டும், நான்காம் நாள எண்ணெய் ஸ்நானம் செய்தபின் வீட்டிற்கு வரலாம. தளிகை பணண லாகாது. அன்று பண்ணும் தளிகை பெருமாளுககும் அதிதி கட்கும் உதவாது. ஐந்தாம் நாள் சுதத ஸ்நாநம் செய்த பிறகே தளிகை பண்ணலாம்

ஸ்நானம் பணணி மடி யுடுததி உடனே திருமண் காப் பணியவேணடும் திருமணிலலாமல் தளிகை பண்ணலா காது. மஞ்சள் பூசிக் கொளளாமல் குளிததால சுததியில்லை.

பொய், மிக்க சினம், கடுஞ்சொல், கோள் சொல்லுதல், புறங் கூறுதல, பொறாமை, வீண் பேச்சு, ஊாவம்பு, கண்ட கண்ட கதைப் புததகங்கள் படிததல், திரைப்படக காட்சி முதலியவறறைத் தவிாககவேணடும்

கணவனுக்கு முன உண்ணல, கணவனோடு உடனுண்ணல் கூடாது யாத்ரை வழி நடையில ஒனறாய் உண்ணுதல் குற்றமனறு. கணவனுச்கு மாறாக நடத்தல், எதிர்ததுப் பேசுதல, கடிந்து பேசுதல முதலியவை தவிர்க்கவேணடும்.

சூரியோதயம் வரை உறங்கல, பகலில் உறங்கல கூடாது பகலில உறங்க நோந்தாலும துக்கத்தால் அழுதாலும ஸநாநம் பணணவேணடும பிற புருஷர்களைத தொடுதல், அவர்கள தனனைத தொட இசைதல், அவர்களோடு சரசமாகச் சிரித்துப் பேசுதல கூடாது

திருமண, ஸ்ரீசூர்ணம தரிககாமல குஙகுமம, சாந்து அணியலாகாது ஸ்ரீசூாணததின மேல பஸ்மம, குங்குமம், சநதனம முதலியவறறைத தரிக்கலாகாது

கடையில் விற்கும பன, பிஸகட், உடைததகடலை, வோகடலை, அவல், பொறி முதலியவறவற வாஙகித் தினணலாகாது முடிநதளவு ஸ்ரீவைஷ்ணவ சமயாசாரத்திற்கு இழுககினறி நடநதுகொளளவேணடும்,

உடற கறபைப் பேணுவது போல உயிர்க கற்பையும் பேணிக் காககவேண்டும அதாவது பிற தெய்வஙகளுககு ஆட்படலாகாது—மறநதும புறந் தொழலாகாது

## ஞானமும அநுஷ்டானமும்

வைஷ்ணவாகள் பெரியோரை யடுத்துக் கற்கத் தகக நூலகளைக கற்று அதற்குத தக நிற்கவேண்டும (கற்றபடி ஒழுகவேண்டும) கறகத தகக கலவி பொதுக்கல்வி, சிறபபுக் கல்வி யென இருவகைபபடும பொதுக கல்வி தமிழ், வட மொழி இலககண இலக்கியங்களும், அம்மொழிகளிலுள்ள செய்யத் தக்கவை செய்யத் தகாதவற்றை அறிவிககின்ற

அறநூல்களும இவற்றை ஐயம திரிபறக் கறக வேண்டும. கற்றபடியே விடவேண்டியவறறை விட்டு (செய்யத தகாதவறறை விட்டு)ச் செயயவேணடியவற்றைச் செயயவேண்டும (விவேக பலம வீடு பற்று' பகுததறிவின பயன் விடுவதும் பறறுவதும.

## செயயத தகாதவை

### பரஹிமசை

பரஹிமசை செய்யலாகாது. (அதாவது தன்னையும பகவத் பாகவத விரோதிகளையும் தவிாதத பிறாக்கும, பிற உயிாகடகும் இமசை, கொலை முதலிய தீங்கு செய்யலாகாது).

### பரதார பரிகரஹம்

பிறர் மனைவியரை விருமபுவதும அநுபவிப்பதும கூடாது பரதாரம் என்றது மணமாகாத கன்னியர், விதவைகள், வேசிகளுக்கும பொருந்தும இது சாஸ்தர விரோதம மட்டுமன்றி இமமையில உலகப் பழிப்பும் மறுமையில நரகத்தையும் விளைககும

தனனை யொழிநத பிறரை நிந்திப்பதும், பகவத் பாகவதா தவிாதத மற்றவர்களை ப்ரயோஜனத்துக்காகத் துதிபபதும செய்யலாகாது

### அசதயகதனம—பொய பேசல்

பொய சொலலலாகாது பொய பிறர்சகு நனமை விளைக்குமாளுல பேசலாம அது பொய்யன்று, மெய எனப படும். உணமை பேசினும அது பிறாக்குத தீமை பயககுமாஞல் அது மெய்யனறு, பொயயின்பால் படும அமமெயயும பேசத் தக்கதன்று

### அபக்ஷ்ய பக்ஷணம்

அதாவது சாஸ்தரங்களில உண்ணத தகாததென்று விலக்கிய உணவுப் பொருளகளை உண்ணலாகாது. ஆஹார நியதியில முன்சொன்னபடி ஜாதி ஆசரயண நிமிதத

தோஷ பதாாத்தங்களேயும, ராஜஸ தாமச பதார்த்தங்களே யும, மது மாமசாதிகளேயும் புசியா தொழியவேண்டும

### பகவதபசாரம்

பகவானிடத்தில் அபசாரப்படலாகாது பகவதபசார மாவது ஸ்ரீய பதியான பரதெய்வமான நாராயணனே ப்ரம ருதராதிகளான சிறு தெய்வங்களோடு சமமாக நினேபபதும, பகவதவதாரங்களே—ராமகிருஷ்ணுதியரை மனுஷ்யரோடு சமமாகநினேததலும, பகவானுடைய அாசசா விக்ரஹங்களே இனன திரவியத்தாலானது என்று தாழ நினேககையும, பக வதாலயஙகளில் உள்ள பகவத்ரவயத்தை அபகரிக்கையும

பகவானுக்கு மிக ப்ரியமான திரவியம் ஆதமா. அதைத தனனதாக அபிமானிககை மிகப பெரிய பகவதரவ் யாபஹாரம.

### பாகவதாபசாரம்

பாகவதாகள திரவயததைக் கவர்தல, அவாகளுக்குத் தீஙகு விளேததல, அவாகளே நிநதிததல் முதலியவை பாகவ தாபசாரம பாகவதாபசாரஙகளில மிகக கொடியது அவர் கள் பிறநத ஜாதியைக கொணடு தாழநதவாகளாக நினேத் தல் பகவதாபசாரபபட்டவாகளும உய்வு பெறலாம பாகவதாபசாரப் பட்டவர்களே பகவான் மனனிககவே மாட்டான, நாசமே பலிககும ஆகையால இவவிஷயததில மிகவும் குறிககொண்டு வாழககை நடதத வேண்டும. எவவளவு ஜ்ஞான பக்தி வைராக்யங்கள இருந்தாலும பய னில்லே பாகவதாபசாரம அழித்து விடும்

### அஸஹ்யாபசாரம்

பகவத் விஷயத்திலும பாகவத விஷயத்திலும ஆசாாய விஷயததிலும உயர்த்தி (பெருமை) கண்டால் அதை சஹிக்கமாட்டாத பொறுமைக் குணமும, ஆசார்ய பக்தாக் குப் பண்ணும அபசாரமும அசஹ்யாபசாரமே. பகவானே ஸஹிக்க மாட்டாத அபசாரங்கள் சில வுணடு. அவை அசஹயாபசாரம எனறும கூறலாம

## ஜீவன வருத்தி

வாண ஆசிரமங்களுக்குப பொருநதாத காரியங்களைச் செயது ஜீவிக்கலாகாது. கூலிககாக பகவத் கைங்காயங் களைச செய்து ஜீவிககலாகாது ததீயாராதனை, உத்சவ கைங் காயம முதலியவறறின பேரால் பணம வசூலிதது ஜீவிகக லாகாது.

தன்னைத தாழத்திக் கொணடு சமசாரிகள (பகவத் விஷயததில ஈடுபடாமல, உலகியல வாழககையையே முகய மாககொண்டு ஐமபுலன இன்பங்களிலேயே ஆழநதவாகள) ஏவின காரியததைச செயது ஜீவிபபதும, அவாசளைப் போறறிப புகழ்நது இசசகம பேசி அவாகள் கொடுககும் பிச்சைக காசு கொணடு ஜீவிப்பதும செயயலாகாது

பணததை வடடிக்குக் கொடுத்து அவவட்டியினாலேயே ஜீவிககலாகாது அபபடி வட்டி ஜீவனம செய்யும கடடாயம ஏறபட்டாலும் பேராசை கொணடு அதிக வடடி வாங்க லாகாது

அடிககடி நீதிஸதலங்கள சென்று வாதி ப்ரதிவாதி களுக்கு அநுகூலம செய்தும் பொய் சாட்சி கூறியும் ஜீவிகக லாகாது

தான வைஷ்ணவன் என்பதே காரணமாக பாகவதாகளை நிர்பநதிததுப் பொருளுதவி பெற்று ஜீவிக்கலாகாது. ரயில் வண்டி, பஸ முதலியவற்றில் பயணச்சீடடு வாங்காமல் ப்ரயாணம் செயவதும, அகபபடடுக் கொண்டால் அதிகாரி களிடம் பலலைக் காட்டிக் கெஞ்சிக் கூத்தாடுவதும் கூடாது. இது வைஷ்ணவத்துக்கு மிக்க இழுக்கு

தாமபூலத்தோடு புகையிலை போட்டுக கொள்ளுதல், மூக்குததூள் உறிஞசுதல், பீடி, சிகரெட், சுருட்டு, கஞசா முதலியவற்றை உபயோகிததல் கூடாது

ஓட்டல உணவுகளையும், பன், ரொட்டி, பிஸகட், காபி முதலியவறறையும் உட்கொள்ளலாகாது இது ஆசாரத்தை மட்டுமன்றி ஆரோகயத்தையும கெடுக்கும்

பாதர ஜலததை நேராகக காலில சேர்த்துக காலலம்ப லாகாது ஜலததைக கையில விட்டே அலமப வேணடும. கிருஹஸ்தன் பித்ரு காயஙகளான தாப்பண சிராததங்களைச் செயயாமல விடலாகாது ஏனெனில இது பகவதாஜ்ஞாரூப மான பகவத கைங்காயம

பிதருககள வைஷ்ணவர்களா? அவாகளை ஆராதிகக லாமா? அது தேவதாநதர பஜனமாகாதா? என்று வினவ லாம

பிதருககளைக கோவில கட்டி பரதிஷ்டித்து யாரும வணஙகுவதிலலை கிருஹஸதாகளால ஆராதிககபபடவேண டியவாகளாய சிருஷ்டியிலேயே பகவானால படைககப்பட்ட வாகள பிதருதேவதைகள அவாகளை ஆராதிக்குமபடி பக வான் விதிககின்றான மனிதன பிறக்கும்போதே பித்ருக் களுக்குக கடன பட்டவனாகவே பிறககின்றான இது பஞ்ச மகா யஜ்ஞஙகளிலே ஒன்று (பரஹம யஜ்ஞம், தேவயஜ்ஞம், பிதரு யஜ்ஞம, மநுஷ்ய யஜ்ஞம, பூத யஜ்ஞம) (கடன்— ரிஷி கடன, பிதரு கடன, தேவர் கடன) எலலா யஜ்ஞங களுககும போகதா (அநுபவிப்பவர்) பகவானாகிய நாரா யணனே ஹவயகவயங்கள இரணடையும புஜிபபவன் நாரா யணனே (ஹவயம—தேவர்கள உணவு—ஹவிஸ கவயம— பிதருககள் உணவு—ஸவதா) பிதருககளுககு அநதாயாமியா யிருநது பகவானே புஜிககின்றான ஆகையாலே இது தேவதாநதர ஆராதனமாகாது யாகங்கள போல இதுவும் பகவதாராதனமே

பிதருககள தஙகள கோதரத்தில ஒருவன வைஷ்ணவனா னால, 'எஙகள குலததில வைஷ்ணவன தோனறினான என்று தோள கொட்டிக் கூததாடுகின்றாாகள்'' என்கிறது வேதம். இபபடிபபட்டவாகள வைஷ்ணவர்களே! ஆதலால ஸவரூப விரோதமுமன்று

### ஏகாதசி

ஏகாதசி மாதமிருமுறை இரு பக்ஷஙகளிலும வரும். ஏகாதசியில உண்ணலாகாது. பகவான் உகந்ததிதி ஏகாதசி.

இதற்கு ஹரிவாசரம (ஹரியின நாள்) என்றே பெயர் ஏற்பட்டுளளது. ஏகாதசியில் உணபவனை பிரஹ்மஹத்தி முதலிய பாபங்களை சூழநது கொளளுமட அனறுணணும் உணவு நாயின் மலததோடு ஒககும பிற காரியங்களை விட்ட துறவிகளும் ஏகாதசியை விடலாகாது. ஏகாதசியில உபவாச மிருககவேண்டும இயலாதவாகள் நொய்க கஞ்சி, பழம, பால், மோா உடகொளளலாம். இப்பொழுது பலரும் பூரி, தோசை, இட்லி முதலியன செய்து புசிககின்றாகள். அது அவவளவு உகந்ததனறு ஆயினும அது பெரு வழககாகி விடடது ஆயினும் அவற்றை மிகக குறைத்துக கால வயிறறு ஆகாரமாகக் கொளவது நலம. வயிறு நிறைய புசிக்கலாகாது

ஏகாதசியில் திருமஞசனமசெயது விசேஷமாக பகவானை ஆராதிக்கவேண்டும் நாள் முழுவதும பகவத குணுநுபவம் பண்ணி நற்போது போக்கவேணடும். விதிபபடி உபவாச மிருந்து இரவு கண விழிதது விரதம் அநுஷ்டிப்பவர்கள் விருமபிய பலன்களையும் மோக்ஷத்தையும் அடைவா. அமப ரீஷன், ருக்மாங்கதன முதலியவர்கள ஏகாதசி விரத மநுஷ டிதது முக்தி பெற்ருாகள் ஆனுல் ப்ரபந்நர்கள் பலனுக காக அநுஷடிக்க மாட்டார்கள், அநுஷடிககலாகாது பகவ தாஜ்ஞை, பகவத் கைங்கர்யமென்றே அநுஷடிககவேண்டும.

மாதம இருமுறையாகிலும வயிறறுககு ஓய்வு கொடுகக வேணடும் மாத மிருநாள படடினி கிடபபது உடம்புககு ஆரோக்யம் ஆரோகயததுககாக படடினி கிடககச சொன்னுல போஜனபரியாகள பொருட்படுதத மாட்டார் கள் விதிததால பயநது செயவாாகள இபபடி ஆரோகயத் தையும கருததில கொணடே சாஸதரம் விதிக்கினறது

துவாதசியில துவரம்பருப்பு, கத்தரிககாய சேர்த்துக் கொளளலாகாது. அகததிககீரை, சுணடைககாய், நெல்லிக் காய் அவசியம் சோககவேணடும் துவரம பருபபுக்குப பதில் பயறறம்பருபபு சேர்த்துக கொள்ளவேண்டும். அமாவாசை

சிராத்த நாள்களில துவரமபருபபு, கததரிக்காய் ஆகாது. பயிற்றமபருப்பு சோததுக கொள்ளவேணடும.

சிராதத தாப்பணங்களை வைஷ்ணவ ரலலாதாரைக கொணடு செயவிககலாகாது வைஷ்ணவ ப்ராஹமணர் களைக் கொணடே செயயவேணடும். அவைஷ்ணவாகளைக் கொணடு செயபவன பிதுராகட்கு மல மூத்ரங்களைக் கொடுததவனுவான

தான் விழுபபாக (மடியிலலாமல—சுததமிலலாமல) இருக்குமபோது மடியாயிருக்கும பாகவதாகளைத் தொட லாகாது தான மடியாயிருககுமபோது விழுப்பாக இருககும ஜ்ஞாநுதிகரான பாகவதாகளைத் தொட நேரநதால் ஸ்நானம பணணலாகாது

கோவில்களில சென்றால் சந்நிதி வரையிலும் செருப்பு மாட்டிக் கொண்டு செலலுதல், ப்ரதக்ஷிணம் செய்யும் போது த்வஜஸதம்ப விமான நிழல்களை மிதித்தல, காலை நீட்டி உடகாருதல, வீண கதை பேசுதல, உறஙகுதல்,மஹா பாகவதரலலாத சாதாரண வைஷ்ணவாகளை வணஙகுதல், வீட்டிலிருநது கொணடு சென்ற உணவை உண்ணுதல், பகவானிடம பலபராாததனை செயதல முதலியவறறைச் செய்யலாகாது

ஆசாாயர், பெரியோர்கள நிழலையும மிதித்தல, தாண டுதல செயயலாகாது விமானம முதலியவற்றின நிழல நெடுகியிருநதால, அடிபபகுதியில கடநது செல்லவேணடும

சிராதத தாபபண தினஙகளிலும, சிராதததின முன் நாளிலும இரவில் உணணலாகாது சிராதத தர்பபணஙகள செய்துவிட்டு இரவில் மனைவியோடு புணரலாகாது அது கொடிய பாபம

பகலபுணர்ச்சி எப்போதும் செய்யலாகாது மனைவியைப் புணர்வதும் பூப்படைநது சுத்தியடைந்த நானகாம நாள் தான் செய்யத்தககது மற்ற நாளகள் உகந்ததல்ல இபபடி யிருபபவர் ப்ரம்மசாரியாகக கருதப்படுவார்

புணர்ச்சி ஏற்பட்ட காலததில ஸநாநம பண்ணுமல் எதையும, யாரையும தீண்டலாகாது. பெரியோாகளும் பெருமாளுககும் தணடனிடலாகாது

நின்றுகொண்டு சிறுநீா கழித்தலும், நீா பருகுதலும் செயயலாகாது குடித்து மிசசம் வைதத நீரை மீணடும குடிககலாகாது

குழநதை பிறநதால் பெற்ருோாககுப பத்து நாள தீட்டுணடு குறைப பிரசவமாளுலும் எத்தனை மாதததில் கருக கலைநததோ அததனை நாள தீட்டு உணடு. குடும்பத் தில யாரேனும இறநதால பதினைநது நாள தீட்டுணடு: (பராமணரலலாதாாககு அப்படிபபட்ட ஆசௌச (அசுசி) காலஙகளில படுககையில படுககலாகாது எணணெய ஸநாநம, க்ஷவரம கூடாது, பணடிகைகள கொண்டாட லாகாது, சுபகாரியங்கள் செயய ாகாது, திருவாராதனம பணணலாகாது; சந்நிதிககுப போகக கூடாது, கோஷ்டி களில கலநது கொளளககூடாது

மரணததீட்டு இறநதவாகளுடைய உறவின நெருக்கம தூரததிறகேறப ஸநாந மாததிரம, ஒரு நாள, மூனறு நாள, பதினைநது நாள எனறு இபபடித தீட்டு நாளகளில விததி யாசம உணடு அவறறைப பெரியோாிடம கேட்டறிக. பெணகளிடம ஆசாரஅநுஷ்டானஙகளில குறைபாடு நககும் பாாததபோ தொருபடியும, பாாககாதபோ தொருபடியும செயயககூடும அதறகாக அவாகளை அடிககலாகாது அனபு காட்டி நல்வாாத்தைகளால திருததிக்கொளள வேணடும

## ஸ்ரீவைஷ்ணவாகளின சிறபபுக கலவி

### அநுபவ கரநதஙகள

பொது நூலகள பறறவேணடியவறறையும விடவேண டியவறறையும உணாத்தும அஙஙனனறிசசே விசேஷ நூல கள பறறவேணடியவற்றையே அறிவிககும வைஷ்ணவா களுககு அததகைய விசேஷ சாஸதாஙகள எவையெனில தமிழமொழியில ஆழவாாகள் அருளிசசெயத திவய பரபந

தங்களும, அவறறுககு ஆசாாயாகள ரத்நங்களேயும், பவளங்களேயும் கலந்து கோத்த மாலே போல தமிழையும் வடமொழியையும் அழகாக அருளிச்செய்த வ்யாக்யான க்ரந்தங்களும், ரஹஸ்ய கரந்தஙகளும், வடமொழியில் பராசரா, சாண்டில்யா முதலிய பரமரிஷிகள அருளிய விசிஷ்ட பரம தாமசாஸ்தரஙகளும, ஆசாாயாகள் அருளிய ஸதோத்ரங்களும விசேஷ சாஸதரஙகள (சிறபபு நூல்கள)

### அருளிசசெயல் சநதை

வைஷ்ணவாகள வைஷ்ணவத்வ பூாததிக்காகக் கற்க வேண்டிய நாலாயிரம பாசுரங்கள் கொண்ட திவ்ய ப்ரபநதம் இருபததுநானகு பரபந்தஙகளேக் கொண்டது இப்ப்ரபந்தஙகளே முறைப்படிக் கற்கவேணடும முறைப்படிக் கற்கையாவது புததகததைப் பாாததுத் தானே பாடம் பண்ணுமல் ஆசாாயரிடமாவது, பரம பாகவதர்களிடமாவது சென்று தணடம் சமாபபித்து ப்ராாததிததுச் சந்தை சொல்லிக்கொணடு கற்கவேண்டும்

சந்தையாவது. பெரியவர்கள் பாசுரஙகளேப் பதம் பதமாகப் பிரிதது முன்னே உருசசொலல பினனே மும்மூனறு முறை சொலவது இபபடிப பலமுறை சநதை கேட்டுக கறகவேண்டும நாலாயிரமும் கற்ருல் நனறு முடியாவிட்டால நாலாயிரததில் மணவாள மாமுநிகள் தொகுததருளிய நிதயாநுசநதானம் கற்றபின திருவாயமொழியாகிலும சந்தை கேடடுக் கற்கவேண்டும திருவாய்மொழி கல்லாதவாகட்கு வைஷ்ணவத்வ சிததியில்லே "சநதங்க ளாயிரமும் அறியக் கறறும் வலலராளுலிறே வைஷ்ணவத்வ சிததி" எனகிறது ஆசார்ய ஹ்ருதயம் ஆழவாரே, "அறியக் கறறு வல்லார் வைடணவர் ஆழகடல ஞாலத்துளளே" எனறருளிச் செய்துள்ளாா் ப்ரபந்தங்களில் ப்ரதானமானது திருவாய்மொழி.

வயிற்றுப் பிழைப்புக்காகப் பல்லாண்டுகள் ஏதையெதையோ வருந்திக் கற்கின்றுர்கள் உயிரின் வாழ்க்கைக்காகத திருவாய்மொழி யாகிலும் கற்கவேண்டாவா?

## இருபத்துநான்கு ப்ரபந்தங்கள்

நம்மாழவார் அருளிச்செய்த ப்ரபந்தங்கள் நான்கு அவை திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாயமொழி எனபன இவை முறையே ருக், யஜுஸ், அதர்வணம, சாம வேதங்களின் சாரம் சாமவேதம் வேதங்களில ப்ரதானம போலே இவற்றில் திருவாய்மொழி ப்ரதானமாயத தனிச் சிறபபுடையது

வேதங்களுக்கு ஆறு அங்கங்கள் உண்டு. அது போல நம்மாழ்வாரின தமிழ் வேதங்களுக்குத் திருமஙகைமன்னன் அருளிய ஆறு பரபந்தங்கள் அங்கங்கள் அவை பெரிய திருமொழி, திருஎழுகூற்றிருககை, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருககுறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் எனபன.

வேதஙகளுககு உபஅஙகஙகள் சிலவுணடு அதுபோல் மற்ற ஆழ்வாாகள ப்ரபந்தங்கள் தமிழ வேதங்களுக்கு உபாங்கஙகள அவை பெரியாழவார் அருளிய திருப்பலலாண்டு, பெரியாழவாா திருமொழி, ஆணடாள் அருளிய திருபபாவை, நாச்சியார் திருமொழி, குலசேகரப் பெருமாள அருளிய பெருமாள திருமொழி, திருமழிசைப் பிரானருளிய திருசசநத விருத்தம, நானமுகன திருவநதாதி, தொணடரடிபபொடியாழவா ரருளிய திருமாலை, திருபபளளியெழுசசி, திருபபாணாழவாா அருளிய அமலனாதி பிரான, மதுரகவியாழவா ரருளிய கணணிநுண சிறுததாமபு, பொயகையாழவா ரருளிய முதல திருவந்தாதி, பூததத்தாழ்வா ரருளிய இரண்டாம் திருவந்தாதி, பேயாழவா ரருளிய மூன்றாந திருவந்தாதி ஆக பதினொனகு ப்ரபநதஙகள் உபாஙகங்கள

திருபபல்லாணடு, திருப்பாவை, கணணிநுண சிறுததாமபு இமமூனறும் உபாஙகங்களாயினும மறறொரு தனிப் பெருமை யுண்டு வேதததுககு பரணவம போல தமிழ வேதததுககுத் திருபபல்லாணடு ப்ரணவம வேதததுககு-

உபநிஷத் போலே தமிழ வேதத்துககுத திருப்பாவை உப நிஷத சகல வேத சாரமான திருமநதரததுககு நமபபதம போலே திவய பரபநததததுககுக் கணணிநுணசிறுததாம்பு. இவையெலலாம வைஷ்ணவாகளுககு மாபெருந் தனம; வைததமாநிதி பெரும பாகயமாகக கிடைதத இச்சீரிய நிதிகளை இழககாமல அறியக கற்று அநுபவிககவேணடும அது நமது கடமை

ஆத்மா உஜ்ஜீவிப்பதறகு அறியவேணடிய பரமார்த தங்களெலலாம இடரபநதஙகளில பொதிநதுளளன வேத வேதாந்தஙகளால அறியமுடியாத அாததஙகளை எலலாம இபரபநதஙகள் தெளிவுபடுத்துகினறன தோணட சுரககும மணறகேணி போல இபரபநதஙகள் அறிவுடையாரின அறிவுககேறபப பொருள சுரககக்கூடியவை

## வ்யாக்யான நூல்களை

திவய பரபநதம் நாலாயிரத்திறகும் பெரியவாசசான பிளளை எனனும ஆசார்ய சிரேஷடர் வயாக்யானம் செய துள்ளாா இவர் திருவாயமொழிககுச் செயத வ்யாகயானத் திறகு இருபத்து நாலாயிரப்படி என்று பெயா இருபத்து நாலாயிரப்படி எனபதறகு இருபத்து நாலாயிரம கரநதங் களின் அளவு கொணடது எனறு பொருள் ஒரு க்ரந்த மென்பது முப்பத்திரணடு எழுத்துககள கொண்ட (அநுஷ டுப்) சுலோகம

வயாகயான சக்ரவாததி என்று பிற மதத்தினராலும் கொணடாடப்படும இவா ரஹஸ்யதரயததிற்கு நிகமனப படி என்னும் சுருககமான உரையும் பரநத ரஹஸயம எனனும விரிவான வயாக்யானமும இயறறியுள்ளாா.

உடையவா அருளிய கதயதரயத்திற்கும் ஸ்ரீ ஆளவந்தா ரருளிய ஸதோதர ரத்நத்துக்கும் சதுஸலோகிககும வயாக் யான மருளிசசெய்துளளாா.

ஸ்ரீராமாயணததில எழுநூறு சுலோகங்களைத தோந் தெடுதது ஆசசாயமான வ்யாக்யான மருளிச்செயதுள்

ளார் அது தனி ஸ்லோக மென்று வழங்கப்படுகிறது. பாரதாதி தனி ஸ்லோகமும இன்னும சில க்ரந்தங்களு மருளிச்செய்துள்ளார இவ ரருளிசசெய்த திருப்பாவை வ்யாக்யானம் மூவாயிரப்படி எனப்படும்,

திருப்பாவைக்குத் திருநாராயணபுரத்து ஆய் என்னும் ஆசார்யா ராயிரப்படி, நாலாயிரப்படியாக இரண்டு வ்யாக்யானங்களும், அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் ஆறுயிரப்படி வ்யாக்யானமும் அருளியுள்ளார்கள

திருவாய்மொழிக்கு ஐந்து வ்யாக்யானங்கள் அமைந்துள்ளன அவை: திருக்குருகைப்பிரான்பிள்ளான் அருளிய ஆறுயிரப்படி, நஞ்சீயர் அருளிய ஒன்பதினாயிரப்படி, வாதிகேசரி அழகிய மணவாள சீயர் அருளிய பன்னீரா யிரப்படி என்னும் உரை, பெரியவாச்சான்பிள்ளை யருளிய இருபத்து நாலாயிரப்படி, நம்பிள்ளை காலக்ஷேபத்தில் அருளியதை வடக்குத் திருவீதிப்பிள்ளை அப்படியே ஏடு படுத்திய முப்பத்தாறுயிரப்படி என்னும ஈடு என்பன.

இஃதன்றியும் மணவாளமாமுநிகள் தமது ஆசார்யர்க்ஞாகச் செய்தருளிய திருவாய்மொழி நூற்றந்தாதி என்னும் ப்ரபந்தத்தில திருவாய்மொழியின ஒவ்வொரு பதிகத்தின் சாரத்தையும ஒவ்வொரு வெண்பாவில அடக்கி அந்தாதித் தொடையாக அருளிச செய்துள்ளார

திருவிருத்தத்திற்கும் நம்பிள்ளை யீடும், அழகிய மண வாளப்பெருமாள வ்யாக்யானமும உள்ளன.

அமலனாதிபிரானுக்கும நம்பிள்ளை யீடும, நஞ்சீயர் வ்யாக்யானமும, தம்பிரான்படி வ்யாக்யானமும் உள்ளன.

பெரியாழ்வார திருமொழிக்குத திருவாய்மொழிப் பிள்ளை ஸ்வாபதேச வ்யாக்யான மருளிச செய்துள்ளார்.

## ரஹஸ்ய க்ரந்தங்கள்

ஸ்ரீமத் பிள்ளைலோகாசார்யா ரஹஸ்ய க்ரந்தங்களாகப் பதினெட்டு க்ரந்தங்களை யருளிச்செய்துள்ளார். அவை; 1 முமுக்ஷுப்படி, 2. தத்வத்ரயம், 3. அர்த்தபஞ்சகம்.

4. ஸ்ரீவசநபூஷணம், 5. அர்ச்சிராதி, 6. ப்ரமேயசேகரம், 7. ப்ரபந்ந பரித்ராணம், 8 சாரசங்க்ரஹம் 9 சமசார சாம்ராஜ்ய, 10 நவரத்நமாலை, 11 நவவித சம்பந்தம், 12. யாத்ருச்சிகப்படி, 13 பரந்தபடி, 14 ஸ்ரீய பதிப்படி, 15. தத்வசேகரம், 16 தனித்வயம், 17 தனிசரமம், 18. தனிப்ரணவம் என்பன.

பிள்ளைலோகாசார்யரின் திருத்தம்பி அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஆசார்ய ஹ்ருதயம் என்னும் ஆச்சார்ய க்ரந்த மருளிச் செய்துள்ளார். இதுவன்றியும் அருளிச்செயல் ரஹஸ்யம் என்னும் ஒரு க்ரந்த மருளிச்செய்துள்ளார் இது அருளிச்செயல் பாசுரத் துணுக்குகளைக் கொண்டே ரஹஸ்யத்ரய அர்த்தங்களை விளக்குவது

முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசநபூஷணம், ஆசார்ய ஹ்ருதயம் என்னும் நான்கு ரஹஸ்ய க்ரந்தங்களுக்கும் மணவாளமாமுநிகள் வ்யாக்யான மருளிச்செய்துள்ளார்.

## ஸ்தோத்ர க்ரந்தங்கள்

ஆளவந்தார் அருளிச்செய்த ஸ்தோத்ரரத்நம், சதுஸ்லோகி, எம்பெருமானார் அருளிச்செய்த கத்யத்ரயம், கூரத்தாழ்வான் அருளிச்செய்த தாடீபஞ்சகம், பஞ்சஸ்தவம் (ஐந்து ஸ்தோத்ரங்கள்), பட்டர் அருளிச்செய்த ரங்கராஜஸ்தவம், ஸ்ரீ குணரத்நகோசம், நடாதூரம்மாள் என்னும் வரதாசார்யர் அருளிய ஸ்லோகத்வயம், ராமாநுஜ சதுஸ்லோகி, பரார்த்த பஞ்சகம், கஜேந்த்ரவரத ஸ்துதி, மணவாளமாமுநிகள் அருளிச் செய்த எதிராஜ விம்சதி, எறும்பியப்பா அருளிய பூர்வதின சர்யை, உத்தரதின சர்யை, வரவரமுநி சதகம் முதலியவை இயன்றவரை கற்று அநுசந்திக்கத்தக்கவை.

---

## அர்ச்சிராதிகதி

ஆத்மாக்கள் தாங்கள் செய்த நல்வினை, தீவினைப் பயன்களை யநுபவிப்பதற்குச் செல்லும் மார்க்கங்கள் நான்கு வகைப்படும். அவை கர்ப்பகதி (தாயின்கர்ப்பத்தை யடையும்

வழி). யாம்யகதி (பாபம் செய்தவர்கள் பாபபலனை யநுவிக்க் யமலோகத்துக்குச் செல்லும் வழி) தூமாதிகதி (புண்யம் செய்தவர்கள் புண்ய பலாநுபவம் பண்ண சுவர்காதி லோகங்களுக்குச் செல்லும் வழி)

ஆர்ச்சிராதிகதி பக்தியினாலோ, ப்ரபத்தியினாலோ பகவதநுக்ரஹத்துக் கிலக்காகி புண்ய பாபங்கள் இரண்டும் கழியப்பெற்று பகவத் கைங்கர்யம் பண்ணப்பெற மீண்டும் திரும்பி வருதலில்லாத பரமபதம் என்னும் முக்தி யுலகம் செல்லும் வழி

முமுக்ஷுக்களால் அடையப்பெறும் இந்த ஆர்ச்சிராதி மார்க்கம் இங்கு சுருக்கமாக விளக்கப்படுகிறது கதி என்றால் மார்க்கம் என்று பொருள். ஆர்ச்சிஸ்ஸை ஆதியாக உடைய மார்க்கம் என்று இதற்குப் பொருள் அர்ச்சிஸ் என்பது ஒளிப் பொருள்களுக் கெல்லாம் அபிமானி தேவதை பரமபதம் செல்லும் முக்தாத்மாவை இந்த ஆர்ச்சிஸ் என்னும் ஆதி வாஹிக தெய்வம் முதலில் (ஆதியில்) வரவேற்று கௌரவிக் கிறது அதனால் ஆர்ச்சிராதிகதி என்று பேராயிற்று

கதி என்பதற்கு அடையப்படும் பலம் என்றும் பொருள் உண்டு பரமபத மடைந்து எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கர்யத்தால் பெறும் பேரின்பம் போலவே இவ்வார்ச்சி ராதி மார்க்கத்தில் இவவண்டத்தில ஆர்ச்சிஸ் தொடங்கி அண்டாதிபதியான ப்ரஹ்மா வரையுள்ள தேவர்களும், பரமபதத்தில நித்ய முக்தர்களும் இம் முக்தபுருஷனை வர வேற்றுக் கொண்டாடி கௌரவிப்பது பரமபதாநுபவம் போல பேரானந்த மளிப்பது ஆகையாலும் இப்பொருளும் மிகப் பொருந்தும்

இப் பரமபத யாத்ரைக்குத் திருவேங்கட யாத்ரை யையும், அக்ரூரனுடைய யாத்ரையையும் உவமை காட்டு கிறார்கள் நம்மாசார்யர்கள் திருவேங்கட மலையில் அப்பனைச் சேவிப்பது கண் படைத்த பயனாகிய பேரானந்தம். அதற்கு முன்பே மலையேறும்போது வழிநெடுக நிலநதோய் நீள்முகில்

சேர் நெறிகளையும, கோல்தேன் பாயந்தொழுகும குளிர் சோலைகளையும, கரிசோ பூமபொழில சூழ கமலச்சுனைகளை யும், குனறேய் மேகமதிர குளிர மாமலைகள் ஏழையும, செங்கயல் திளைகும் சுனைகளையும் கணடு களிததுச் செல வதும பேரானந்தமலலவா?

அகரூரன கம்சனல் ஏவபபட்டு வில விழாவிறகாகக் கண்ணனை அழைததுச செலவதற்காகப் புறபபட்டான். கண்ணனுடைய நிாஹேதுக கருபையாலே ஜ்ஞாஞேதயம பிறந்தது அதனுல் கணணனைப் பாாககச செலவதையும், பாாபபதையும பெரும பேருகக கருதிப பெரிய பாரிபபோடு செலகினருன.

“பகவத தவேஷியான கம்சனுக்கு ஏவலதொழில செயது அவன சோறறை யுண்ட எனக்கு இப்பாகயம் கிடைபபதே! அடபொழுதலர்நத செந்தாமரைக கமலம போனற கணகளை யுடைய அவ்விஷ்ணுவினுடைய அழகிய முகத்தைப் பார்க்க போகினறேன கணணன எனனை, அகரூரா! என்றழைப பான், க்ஷேமம விசாரிபபான, இழுதது அணைததுக்கொள் கொளவான” என்றெலலாம பலபடியாகப் பாரிததுக கொண்டு சென்ருன் அகரூரனுக்குக கண்ணனுடைய தரி சனததுசகு முனபே அவன் பாரிததுககொண்டு சென்ற செலவே (செலலுகையே) பேரானநதமாயிருநதது

அதுபோல இநத அாசசிராதிமாாக கமனமும பகவத ப்ராபதிககு முன்பே கிடைககும அவாநதர பலம் (இடை யில் கிடைககும பேறு)

இவ வாச்சிராதி மாாகம் உபநிஷத்துகளில் விளக்க மாகக கூறபபடடுளளன, உபநிஷததுகளின அர்த்தத்தை ந்யாயவாதஙகளால் நிாணயம பணணவந்த வயாசருடைய ப்ரஹ்மஸூதரங்கள எனப்படும மீமாம்ஸா சாஸ்தரததில சுருககமாகக கூறபபட்டுளளது தராவிடோப நிஷததாகிய திருவாய்மொழியில் ‘சூழ்விசும்பணிமுகில’ எனனும் பதிகத் தில் ஆச்சிராதி மாாகம் ஓரளவு விளக்கபபட்டுள்ளது.

ஸ்ரீ பிள்ளை லோகாசார்யா அருளிச்செய்த அஷ்டாதச ரஹஸ்யத்தில் ஒன்ருன ''அர்சசிராதி'' என்னும் நூலில் நான்கு பகுதிகளாகப பிரித்து விளககமாக அருளிச்செய துள்ளார்

நடாதூராமமாள என்னும வரதாசார்ய ரருளிய அழகான இரு சுலோகங்களால் இவ் வாசசிராதி மாாகம சுருக்கமாக அருளிச செயயப்பட்டுள்ளது அசசுலோகங்கள இநநூலில் மற்ருேரிடததில் காலையில் அநுசந்திகக வேண்டிய கிரமத தில் கொடுக்கபபட்டுள்ளன அங்கே காணக

காருணிகனுன சாவேசுவரன் சிலரை நிாஹேதுகமாகக கடாக்ஷிக்கின்ருன. அதனுல் அவாகளுக்கு சத்சங்க முணடா கிறது (சததுக்கள-பரஹமததை யுணாநத பெரியோர்கள) சத்துக்களுடைய உபதேசமாகிற அருள மொழிகளாலே சம்சாரததில் அருசியும, பகவத் விஷயததில் ருசியும உண்டாகிறது (சமசாரம்—சரீர சமபநதமும், அதனுல வருகினற இன்ப துனப அநுபவஙகளும்) பிறகு அபபாகவ தர்களுடைய புருஷகாரத்தாலே சதாசாரியனை ஆசரயிதது ஸமஸ்கார சமபந்நனுகி ஆசார்யன் மூலமாக ஸ்ரீய பதியை சரணம புகுகினருாகள பிறகு கிரமமாக அறியவேணடிய ஆததஙகளை யெலலாம அறிந்து ஞானம கனிந்த நலம பெறுகின்ருாகள (நலம்-பக்தி) அந்தபகதியானது நாளுக்கு நாள் முதிாநது பரபக்தி, பரஜ்ஞான நிலைகளைக் கடநது பரமாபகதி எனனும உயாந்த நிலையைப பெறுகிறது இததகைய பகதாகளின பாபங்கள என்னுகும? எனற வினு எழுகின்றது

ஜீவாத்மாக்களுடைய பாபஙகள் மூன்று வகையாகப பிரிக்கப்படுகின்றன அவை; சஞ்சிதம, ப்ராரபதம, ஆகாம யம எனபன

சஞ்சிதமாவது: முன் பல பிறவிகளில் செய்து அநுப விதது மாளாமல மிகுந்துள்ள பாபங்கள் ப்ராரப்தமாவது: இப்பிறவியில் பலன கொடுககத் தொடங்கியிருக்கும பாபங் கள் ஆகாம்யமாவது இனிமேல் செய்யப்படும பாபங்கள்.

இவ்வளவு ஞானம் பிறந்த அதிகாரி இனிமேல் பாபங் களைச் செய்யமாட்டான் தன்னை யறியாமல செய்ய நோந்தாலும அநுதாபத்தால் நசிததுபபோம அவை ஈசுவரன திருவுள்ளததில் படா சஞ்சிதமெனனும முனனைப் பழவினைகளை ஈசுவரன் மன்னிதது மறநதுவிடுகினறான இனி யுளளது இபபிறவியில அநுபவிககவேண்டிய பராரபதம் ஒன்றே அதையும ராஜபுதரனுககு ராஜா லகுதணடனை விதிப்பது போலச சில துககாநுபவஙகளைக் கொடுததுத தீாதது விடுகின்றான் அபபடியும சில பாபஙகள் இருநதால் இவனுக்கு விரோதிகளிருநதால அவாகளுககுக கொடுதது விடுகினறான புண்யமும் மோக்ஷ விரோதியாகையால இவ னுடைய புண்யததை இவனுடைய அநுகூலாகளுககுக் கொடுதது விடடுச் சுத்தனாகி விடுகின்றான்

ஹ்ருதயததிலிருநது மேல நோககிச செலலும நாடிகள் நூற்றியொன்று இவை தமனிகள் எனப்படும இவறறில் மத்ய தமனிககு ஸுஷுமனை எனறு பெயர் ஹ்ருதயத் தில் தங்கியிருககும ஆதமா ஹ்ருதயத்தில வசிக்கும இறை வனால (ஹாாதரனால) ஒளி காடடி வழி காட்டபபெற்று மதயதமனி யெனனும ஸுஷுமநா நாடியின வழியாக சூக்ஷ்ம சரீரததோடு வெளிபபடடு அநநாடியோடு சமபந் திததுளள சூாயரஸ்மி வழியாகச சூாயமணடலம நோககிப புறபபடுகின்றான.

இப்படிப புறபபடுமபோது ஆழவார்கள, பூாவாசார் யர்கள போன்ற சிறநத அதிகாரிகளை எமபெருமான் தானே நேரில பெரிய திருவடியின மேல் ஊாந்து (கருட வாஹனததின மேல்) வந்து அழைத்துச செலவான. சிலரைப் பெரிய திருவடியை அனுபபி அழைத்துககொள் வான சிலரை ஆதிவாஹிகா் எனனும விஷ்ணு தூதாகளை விட்டு அழைததுககொளவான.

இபபடிப் புறப்படுமபோது முதலில் அக்நி முதலிய ஒளிபபொருள்கட கெலலாம அபிமானியாகிய அர்ச்சிஸ் என்னும் தேவதை எதிாகொண்டு வரவேற்று உபசரிககிறது.

பிறகு பகலுக் கபிமானி தேவதையும், சுக்ல பக்ஷாபிமானி தேவதையும, உத்தராயணாபிமானி தேவதையும், சம்வத சராபிமானி தேவதையும, காறறுத தேவதையும தங்கள் தஙகள் ஸ்தானங்களைக கடந்து செல்லும்போது பூர்ண குமபங்களோடு எதிர்கொண்டு வரவேற்று வாழ்த்தி வணங்கி வழி நடத்தி உபசரிக்கின்றனா பிறகு ஒரு சூர்யன் மறறொரு சூரயனைக கிட்டுவது போல ஆயிரம் சூர்யாகளின் பிரகாசமுளள இவவாத்மா சூரய மண்டலததைக கிட்டுகின் றான சூரயபகவான் இவனை வரவேறறு உபசரிக்கின்றான். பிறகு சூரய மண்டலததின் மததியிலுள்ள துவாரத்தில் புகுநது செல்கின்றான்.

பிறகு சந்திரனும், மின்னலுக்கு அபிமானி தேவதை யான விதயுத தேவதையும, வருணனும இவனை வரவேற்று வாழநதி வணஙகுகின்றார்கள. பிறகு சுவர்க்கலோகததில் புகுமபோது திரிலோகாதிபதியான இநத்ரன் அமரகணங் கள புடைசூழ எதிர்கொணடு உபசரித்துச் சத்கரிக்கின்றான்.

அதனபிறகு சதயலோக மென்னும ப்ரஹ்மலோகத்தில் இவ்வாதமா பரவேசிககும்போது அண்டாதிபதியான சதுர் முக பரஹமா சதயலோகவாசிகள் புடைசூழ எதிர்கொண்டு வந்து நலவரவு கூறி வரவேற்று உபசரிக்கின்றான்

இபபடிப பெருமதிபபுடன சென்ற இம் முக்தாத்மா இவவணடததையும, இவவணடத்தைச சூழ்நதுளள ஏழு ஆவரணங்களையும, மூலபரகருதியையும கடநது பரமபதத துககும, லீலா விபூதிககும இடையில் எலலையாயுள்ள அமருதமயமான வ்ரஜா நதியைக் கிட்டுகின்றான் உடன சென்ற ஆதிவாஹிக புருஷர்களால் வரஜையில் ஸ்நானம செயவிககபபடுகின்றான் வ்ரஜையில் மூழ்கினவாறே மற் றொரு ஜனமததுககுக் காரணமான இவனுடைய சூக்ஷும சரீரமும, வாசநாரேணுககளும (பல பிறப்புக்களில் அநுப வததால ஏறபட்ட ஆசைகளின நுண்துகளகள்) அரிசியை

நீரில கழுவியபோது அரிசியில் ஒட்டியுள்ள நுண்ணிய தவிடுகள் நீரில் கரைந்துபோவது போலக் கழிநது போகும்.

வ்ரஜையில் மூழ்கி யெழுநதவுடனே வரஜையின அக கரையில எழுநதருளியுள்ள அமாநவன எனனும பகவான தன் திருககைகளாலே தீணடுகினறுன தீணடிய மாதரத் தாலே இம முகதாதமாவுககு அதயதபுதமான ஒரு திவய சரீரம உணடாகின்றது அததேஹம பரமபதநாதனுடைய திருமேனி போலவே அதிசுநதரமாய், நறுமணமுடையதாய், விட்டிலங்கு சோதியாய், சஙக சகரஙகளோடு கூடிய நான்கு புஜஙகளை யுடையதாய சுதத சதவமயமாய் இருக கும பகவதநுபவதததுககே உரியதாய, இருபததைநதே மதிச கததக்க வயதளவு உடையதாயிருக்கும

இபபடித திவய சரீரம பெறற உடனே அஙகுளள நிதய மூத்தாகள சகலவித வாதயங்களும முழஙகக கூட்டங் கூட்டமாக வநது வரவேறறுப பெரிய ஆரவாரத தோடு அழைததுச செலவா அவவளவில் எம்பெருமான் நியமனததாலே ஐநநூறு திவயாபஸரஸகள திவயாபரணங் கள், திவய வஸதரங்கள, திவய மாலைகள, திவயசூரணங்கள் முதலியவறறை யேந்திக்கொண்டு நிதயசூரிகள புடை சூழ வநது இவனை பரஹமாலங்காரம (பெரிய அலஙகாரம்) பண் ணுவர்கள். அவவளவிலே பகவந நியமனததாலே பகவத்சங சல்பத்தா லுணடான அதயாசசர்யமான விமானததைப் பெரிய திருவடி கொண்டு வர, இவனை அதிலே ஏறறி ஸதோத்ரம பணணிககொண்டு தில்யகாநதாரம் என்னும் இவன் இளைப்பாறுவதறகாகவே ஏற்படட திவ்ய (விருக்ஷம்) உபவனம வரை சென்றவாறே மற்றும பல திவ்யாபஸரஸ் கள் நாநாவிதமான உபஹாரஙகளை (பழம், புஷபம் முதலி யவைகள்) ஏநதிக்கொண்டு வந்து உபசரிப்பர்கள் திவய காந்தாரத்தருகிலும ஆரம்ருதம் என்னும் திவ்ய தடாகத் தருகிலும சிறிது தங்கி இளைப்பாறிச் செல்வான் (அங்கு இளைபபெனபதே உண்டாகாது ஆயினும் இளைபபாறத்

தங்க வைத்து அழைத்துச் செல்வது ஒருவலகக் கௌரவ உபசரிப்பு). செலலும வழியில் அதயாசசாயமான அபராக் ருத திவய சோலைகளையும், அசசோலைகளில சஞசரிககும குயில, மயில், கிளி முதலிய நாநாவித திவய பக்ஷிகளையும, மாணிக்கப படிகளமைநத அமருதமயமான ஏலம நிறைநத திவ்ய தடாகங்களையும, அத்தடாகங்களில உலவும அனனம, ஸாரஸம் முதலிய திவ்யமான நீாபபறவைகளையும கணடு களித்துககொணடும, பறவைகளின இனிய சபதஙகளையும, திவய வணடுகளின இனிய திவய கானததையும கேடடு மகிழநது கொணடும சென்று ஸ்ரீவைகுண்ட மாநகரததின திவய கோபுரததைக கிடடுவான

திருககோபுரததிறகுத தண்டம சமாபபிபபான திருக கோபுரவாசல காககும முதலிகள இவனைக கொணடாடி வரவேறறு உளளனுபபுவா உள்புகுந்து வைகுநத மாநகரததிறகுத தணடம் சமாப்பிப்பான நிதயாகளும் முகதாகளும இவனைப் புடைசூழநது பெரிய ஆரவாரத் தோடே திருவீதிகளின வழியாக அழைத்துச செல்வாாகள. சேனைமுதலியாா தொடககமான நிதய சூரிகளும் முக்தா களும தஙகள தங்கள திருமாளிகைகளின வாசலகளில இவனைப பூாண கும்பததோடு வரவேற்று இவனை உயர்நத ஆசனததில இருததித தாங்கள கீழிருநது தங்கள தேவிமார் கள நீாவாாகக இவனைத் திருவடி விளககித தீாததம கொள வர் இவனுடைய பெருமையைப் பேசி மகிழவா. பிறகு ஸ்ரீ வைகுணடநாதனுடைய திருககோயில் விமானத்தைக் கிட்டித தணடம சமர்ப்பிககும்போது ஸ்ரீ வைகுணட நாதனுடைய திருவடி நிலைகளையும், மங்கள தீபஙகளையும், பூர்ண கும்பஙகளையும, திருமாலை, திருபபரியட்டம் முதலியவற்றையும ஏநதிக்கொண்டு நித்ய சூரிகளும் முக்தாகளும புடைசூழ மதிமுக மடநதையர் எதிர்கொணடு சத்கரிப்பா

பிறகு ஸ்ரீவைகுண்டநாதன இவனுக்குச சேவை சாதிக்க எழுந்தருளியிருக்கும் திருவோலக்கததிறகு அழைத்துச்

செலவார்கள அவ வோலகக மணடபம திருமாமணி மணடபம எனப்படும இஃது பலலாயிரககணககான ரதந மயமான தூணகளமைநத அதிவிசாலமான ஆனநதமயமான மணடபம அமமணடபததின நடுவில தாமம தொடக்க மான எட்டு ததவஙகளைக காலகளாகக கொணட தாமாதி பீடம (தாமம, ஐஞானம, வைராககயம, ஐசுவாயம, அதர் மம, அஐஞானம, அவைராககயம, அநைசுவாயம எனபன எட்டுக காலகள) அதனமேல எட்டு இதழகளையுடைய (பனனிரணடு இதழகள எனபதுமுணடு) அதபுதத் தததுவ மான தாமரை அமாநதிருககும அதன இதழகளில அமலா, விமலா தொடககமான சாமர கனயைகள சாமரம வீசுவா அககமலததின மேல ஐஞான பலங்களுககு இருபபிடமான திருவநநதாழவான (ஆதிசேஷன) தனது சிரோரதநஙகள ஒளிககிரணஙகளை வீசும ஆயிரம பணமுடிகளையும மேல விதானமாகக கவிழததுத தனது திருமேனியை மணடலா காரமாக அமைதது ஸ்ரீவைகுணடநாதனுககு ஆசனமாக (மெதததையாக) அமைநதிருபபார்.

அவ்வாசனத்தில (மெத்தையில்) வலவருகில் கருணை யின வடிவமான ஸ்ரீதேவியும, இடவருகில பொறுமையின வடிவமான பூமிதேவியும, ஆனந்ததததவமான நீளாதேவியும வீறறிருகக நடுவே எமபெருமான் இடத்திருவடியைக் கீழே தொஙகவிட்டு, வலததிருவடியைக குத்துக்காலிட்டு, வலத் திருககையை வலது முழநதாளின் மேல நீட்டி, இடத்திருக் கையைத திருவனந்தாழ்வான மேல் ஊன்றிப பினனிரணடு திருக்கைகளால் சங்க சக்ரங்களை ஏநதி வீறறிருந்தருள வான்.

பதினாறு வயதே தோறறமுடைய ஆதியஞசோதி யுரு வான எமபெருமானுடைய திருமேனியின நீல ரத்நப் பேரொளியும், பிராட்டியின் பொனனிற ஒளியும சோந்து அற்புத ஜோதியாய நிதய விபூதி முழுவதையுமே விளஙகச் செய்ய அப்பேரொளியிலே நித்யர்களும், முக்தர்களும் எம்

பெருமானைப் போலவே ரூபமுடையவர்களாய், இருபத்தைந்து பிராயத் தோற்றமுடையவர்களாய அஞ்சலி பண்ணிக் கொண்டிருப்பார்கள் திவ்யாயுதங்களான நித்ய சூரிகள் அந்தந்த ஆயுதங்கள் தங்கள சிரசிலே தோன்றத் திவ்யத் திருமேனியோடு காட்சி யளிப்பார்கள். பெரிய திருவடி (கருட பகவான்) முன்னாலே அஞ்சலியோடு எழுந்தருளியிருப்பர்.

இந்நிலையில இந்த முக்தபுருஷன ஓலக்கத்தில புகுந்து பகவானை நெருங்க பகவான தன திருக்கையை நீட்டி வரவேற்பான அவனுடைய திருக்கையைப பற்றிக்கொண்டு திருவனந்தாழவான மேல அடியிட்டு ஏறுவான. எம்பெருமான் இவனை அப்படியே மாரோடு அணைத்து மடிமீ திருக்கச செய்து குசலப்ரச்னம பண்ணுவன.

பகவான் இவனை (கோஷி), "நீ யார?" என்று கேட்க' இவன, "அஹம ப்ரஹ்மாஸ்மி" (நான் ப்ரஹ்மத்தின் புத்ரன) என்பான "இத்தனை காலம எங்கே சென்றிருந்தாய்?" என்பான இவன் "சம்சாரமாகிற நரகத்திலே ஆழ்ந்து கிடந்தேன" என்பான." அங்கு என்ன செய்து கொண்டிருந்தாய?" என்று எம்பெருமான வினவ, இவன, "சாந்தேந்து மென்முலையார தடந்தோள புணர்இன்ப வெள்ளத்து ஆழ்ந்தேன்" என்பன

பகவான, "அதனால பெற்ற பயன் என்?" என்ன, இவன, "அருநரகத்து அழுந்தும பயனடைந்தேன" என்பன, "அதனை விட்டு இங்கு எவ்வாறு வந்தாய?" என்ன, "போந்தேன புண்ணியனே! உன்னுடைய நிர்ஹேதுக கிருபையாலே இங்கு வந்தேன்" என்பன "இதனால நீ பெற்ற பயன ஏது?" என்ன, "என தீவினைகள எல்லாம் தீர்த்தேன, உன்னை யடைந்து கண்களாரக் கண்டு கைகளாரத் தொழப்பெற்றேன, கைங்கர்ய சாம்ராஜ்யம் பெற்றேன" என்பான்

பிறகு எமபெருமான் இவனைப பார்த்து, "நீ சம்சாரத்தி லிருந்து நோவுபட்டபோது உபேக்ஷித்திருநதேனே! சம்சாரத் தை அருவெறுத்து நம்மை விரும்பி யழைததபோது முகம் கொடாதிருநதேனே!" எனறிபபடிப் பலபடியாக ஆறுதல் வார்த்தைகளைக கூறிக் குறறஞ் செயதாரைப் போலே மனனிக்கவேணடிப பின பிராட்டி திருக்கைகளிலே கொடுப் பான. அவளும் நெடுநாள் பிரிந்த புத்ரனைப் பெற்ற தாய் போலே வாத்சலயமெலலாம் தோனற எடுத்தணைதது உச்சி மோந்து கைஙகர்யச் செல்வததைக் கொடுத்தருள, மடியில் நின்று மிறங்கி எமபெருமானுடைய சமுதாய சோபையை யும், அவயவ சோபையையும, திருவாபரணங்கள, திருப் பீதாம்பரங்கள், திவயாயுதங்கள் இவறறின் சேர்த்தியழகை யும் கண்டு ஈடுபட்டு முன்னும் பின்னும சுற்றிலும் சென்று சேவித்துத தணடனிட்டுப பல்லாணடு பாடிப் பேரானந்த வெளளததில் திளைப்பான பல திருமேனிகளைப் பரிக்ர ஹிததுச சகலவிதமான அடிமைகளையும் செயது அப்பொழு தைக் கப்பொழுது ஆராவமுதமாக அநுபவிபபான காலம் நடையாடாத பரமபததிலே இவவநுபவம் க்ஷணததிற்கு க்ஷணம் புதிது புதிதாகத தோன்றும

---

## ஸ்ரீவசநபூஷண சாரம்

நம ஸ்ரீவைஷ்ணவ சமபரதாயததின ஓராண்வழி ஆசாரயாகள பதினெணமா அவருள பதிநனுமவர் ஸ்ரீமத் பிளளைலோகாசார்யா இவா நமபிளளையின கருபாகடாக்ஷத் தால் வடககுத திருவீதிப்பிளளையின் குமாரராக அவதரித் தவா இவா காஞசிப பேரருளாளப் பெருமாளின அமசம். நமபிளளை என்பதும லோகாசாரயா எனபதும நஞசீயரின் சிஷ்யரான கலிகனறி தாசரின திருநாமம். அதுவே இவருக் கிடபபட்டுப பிறகு பிளளைலோகாசாரயா என்றுயிற்று. இவா பீஷ்மரைப போலும், சிறிய திருவடியை (அநுமான)ப் போலும பரஹமசாரய நிஷ்டையோடு வாழ்நதவா

இவா தம் பரம கிருபைபால் பூர்வாசாாயாகள் பரம ரஹஸயமாக அநுசந்தித்து வநத ஆாததங்களே யெலலாம காஞசி தேவபபெருமாள் அநுமதி கொண்டு கிரநதங்களாக (நூலகளாக) அருளிச் செயதுளளார். அபபடி அருளிச் செயத ரஹஸ்ய கரந்தங்கள் பதினெட்டு. இவையனைததுக கும அஷ்டாதச ரஹஸயம எனபது பொதுப பெயர். இவற றுள தனிச சிறபபுடையது ஸ்ரீவசநபூஷணம்.

''அன்னபுகழ் முடும்பை அண்ண லுலகாசிரியன
இன்னருளால் செய்த கலை யாவையிலும—உனனில்
திகழ் வசநபூடணததின் சீர்மை ஒன றுககிலலை
புகழலல இவவாாததை மெயயிப்போது''

என்று இதன சீர்மையை மணவாள மாமுநிகள கொணடாடு கின்றா. ஸ்ரீவசநபூஷணத்தின் பெருமையை மணவாள மாமுநிகள உபதேச ரதநமாலையில ஏழு பாசுரங்களால் பாராட்டியுளளமை ஒன்றே போதும இநநூலின் ஒபபுயா வற்ற பெருமைக்கு.

இவா காலம் 14-ஆம் நூறறுண்டு இவா காலததில் காஞ்சீபுரததுககருகில மணலபாககம எனனும ஊரில பெரியார் ஒருவர் வாழ்ந்து வநதாா மணலபாககத்து நமபி யென்றே அவரை யழைபபா அவா தேவபபெருமாளுக்கு அநதரங்க பக்தர் அவருக்குத தேவப்பெருமாள் ஸ்வபனத் தில சில பரமாாததங்களை யருளிச்செயது, ''இரண்டாற் றுக்குட நடுவில (திருவரங்கததில்) போய வாசம பண்ணு வீா! அஙகு இனனும பல விசேஷாாததங்களை உமககு நேரே சொலலுவோம'' என்று அருள, அவரும் அப்படியே வந்து திருவரங்கததில வசிததுக்கொணடு வரும்போது கிழககே ஒரு சோலையில உளள காட்டழகியசிங்கர் சந்நிதிககு ஒரு நாள சென றபொது அங்கே பிளளைலோகாசார்யா தம் அந் தரங்க சிஷயாகளுககு ரஹஸயாாததங்களை அருளிச செய்து கொணடிருநதாா அவற்றை மறைவிலிருந்து கேட்ட மணல்பாக்கதது நமபி அவறறுள தமககுப பேரருளாளர்

அருளிசசெயத பரமார்த்தங்களெலலாம் இருக்கக் கேட்டு ஆச்சர்யப்பட்டு, அவரைத தேவபபெருமாள் சொனன பெரு மாளின் அவதாரமென் றறிந்துகொண்டு வெளிபபட்டு வந்து தண்டம சமர்ப்பிதது, "அவரோ நீா?" என்று வினவ, "இபபடி வினவுவதற்கு மூலமென" எனறு வினவ, இவரும நடந்த செய்திகளை விணணப்பித்தார்.

லோக குருவும் இவரைப் பெருமாளுக்கு அந்தரங்க ரென்று மதிததுக் கொணடாடித தம் சிஷ்ய கோஷ்டியில சோததுககொணடு ஆசாாய பரம்பரையில வநத ரஹஸ யாாததங்களை யெலலாம உபதேசித்தருளினா ஒரு நாள தேப்பெருமாள மணவ பாககததுநமபியின கனவில் தோனறி இவவாததங்களெலலாம அழிந்துபோகாமல பிற்காலத்தா அறிந்துயயுமபடி ஒரு நூலாகச செய்யுமபடி நாம சொனன தாக உமமாசாாயருககு விணணப்பியுமெனறு நியமிக்க, நமபியும அபபடியே பகவந நியமனத்தை விண்ணபபிககப பிளளைலோகாசாாயரும அதனை யங்கீகரிததுச் செயதருளிய க்ரநதம ஸ்ரீவசநபூஷணம

பூாவாசாாயாகளுடைய வசனங்களை மிகுதியாகச கொணடு அவறறோடு சிறுபான்மையான தமமுடைய வசனங்களைக் கொணடு இணைதது அறிவு படைதத ஆதமாக களுககு அழகு தரும் ஆபரணமாகச் செயயப்பட்டது. ஆதலின இதறகு ஸ்ரீவசநபூஷண மென்று திருநாமம சூட்டினா 'ஸ்ரீ' என்பது இதனுடைய பெருமையைச குறிககும அடைமொழி ரத்நங்களாலான பூஷணம உடம புக்கு அழகு தரும் அதுபோல பூாவாசாாய வசனங களாலான இந்த பூஷணம உயிருககு அழகு தரும ரதநங்கள் பொன்னிலே அழுத்தப்படும். அதுபோல் முன னோா மொழிநத வசனங்களாகிய ரத்நங்கள் பிள்ளைலோகா சார்யருடைய வசனங்களாகிற பொனனிலே பதிக்கபபட் டுள்ளன.

இவ்வழிய நூலுக்கு மணவாள மாமுநிகளும், திருநாரா யணபுரத்து 'ஆய' என்னும் ஆசார்யரும வ்யாக்யானங் கள் அருளியுள்ளார்கள், மணவாள மாமுநிகளின் ஆழ் பொருள்க ளடங்கிய வ்யாக்யானத்திற்குத் திருமழிசை அண்ணவப்பங்கார் என்னும் பெரியார் விரிவான சிறந்த அரும பதவுரை யொன்று எழுதியுள்ளார். ஸ்ரீபெரும்பூதூர் எம்பார் ஜீயரும் சுருக்கமான அரும் பதவுரை எழுதியிருக் கின்றார்.

இதுவேயன்றி வ்யாசருடைய மீமாம்சா சூதரங்க ளுசகு ஸ்ரீபாஷ்யகாரர் (ராமாநுஜா) பாஷயம இட்டது போல ஸ்ரீவசநபூஷணமாகிற மீமாம்சா சூதரங்களுககுக் குனைததூரையன என்னும் பெரியாா சமஸகருத மொழி யில பாஷ்ய மெழுதியுள்ளாா (பாஷயம்—விரிவுரை)

சூதராாததங்களை சூத்ரங்களைப் போன்ற வாக்யங் களால் விளசகிககொணடு தன்னுடைய வாகயஙகளையும விளக்குவது பாஷயம

சிலவகை எழுததில பல்வகைப பொருளைச் செவ்வன (நனருக — தெளிவாக) ஆடியில் (கணணுடியில) காண்பது போல செறிதது (அடககி) இனிது விளககித திடபம (அசைசக முடியாத தனமை), நுடபம (சூக்ஷமமான கருததுக களை) செறிநதது (அடககியுளளது) சூதரமாகும

சகல சாஸகரங்களும மோக்ஷததிறகு உபாயமாக கர்ம ஜ்ஞான பகதிகளைப் பரககக கூறி பரபததி யெனனும சரணு கதியைச சுருஙகக கூறும கணணனும கீதையில பதினெடடு அதயாயங்களில இதர உபாயஙகளை விரிவாக விளககி அவறறைக கேடடு அஞ்சிய அாஜுனனுககு, "ஆகில அவறறையெல்லாம ருசி வாசனைகளோடு விட்டு என்னையே பறறு" எனறு சரணுகதியைச சுருககமாக உபதேசிததான.

ஆனல், சுவாமி பிள்ளைலோகாசாாயர் அநத காம ஜ்ஞான பக்திகளின ஸதானததிலே ப்ரபத்தியை வைத்து எடுதத எடுப்பிலே ப்ரபத்தியை வர்ணித்துப் பிறகு

அதிலுள்ள தோஷங்களை விளக்கி, ஆகையால ஆசார்யனே உபாயம என்று கூறி, அநத ஆசார்யனைத தான பற்றும் பறறுதலைக காட்டிலும, ஆசார்யன கிருபையாலே இவனை மேல விழுநது அங்கீகரிக்கையே, அதாவது அபபடி அஙகீ கரிககுமபடி ஆசாாயன அபிமானததிலே ஒதுஙகி ஆசாாய னிடட வழககாயிருககையே சிறநத உபாயம எனறு முடித் தருளுகினறா

இநநூல நானகு ப்ரகரணஙகளை (பிரிவுகளை)க கொண் டது. ஆயினும பொருள் வகையால ஆறு பரகரணங்களாக வும, ஒனபது பரகரணஙகளாகவும கொண்டுள்ளன,

ஆறு பிரிவுகளாகக் கொளளும் பக்ஷததில இவற்றில் புருஷகார பூதையான பிராட்டியின் பெருமை, உபாய பூதனை பகவானின பெருமை (பகவானுகிற உபாயததின் பெருமை), பரபததி யதிகாரிகளின நிஷடை, சதாசாாய னும ஆசாாய சமாசரயணமும எமபெருமானுடைய நிர் ஹேதுக கருபை, ஆசாாயனுடைய உபாயதவம எனனும் வாறு பிரிவுகளும் அடங்கும.

ஒன்பது ப்ரகரணஙகளாகக் கொள்ளும்போது பிராட்டி யின் கிருபையின ஏற்றம, திருமகள் கேள்வன் திருவடி களையே உபாயமாகப பற்றுவதன நன்மை, அதைத் தவிர்த்த மறற உபாயங்களின் புனமை, பரபத்தி நிஷடாகளின் பெருமை, சாஸ்தர விததுககளான பாகவதாகளின சீர்மை, நாராயணனின் திருவடிகளைக் காட்டித தநத ஆசாாயன் பெருமை, நிதயசூரிகள நிாவாஹகனை பகவான் நிாஹேதுக (இயலபான) கருபையால ஜீவாகளை உஜ்ஜீவிப் பிக்கும் தனமை, ஆசார்யனை மோக்ஷோபாயமாகப் பறறிய அதிகாரிகளின பெருமை, உபாயமும் பலமும் ஆசாாயனே என்பது இவவொனபது கருத்துக்களையும் கொளளவேண் டும் இக்கருத்துகளெல்லாம் ஆங்காங்கு விளங்கும

வேதார்ததம் அறுதியிடுவது ஸ்ம்ருதி, இதிஹாஸ புராணங்களாலே ஸ்ம்ருதியாலே பூர்வ பாகத்தில் அாததம் அறுதியிடக்கடவது மற்றை யிரண்டாலும் உத்தர பாகத்

தில் அர்த்தம் அறுதியிடக்கடவது என்பன முதல் மூன்று சூத்ரங்கள்.

ப்ரமாணங்களில் சிறந்தது வேதம். அது கர்ம பாகம் என்றும் ப்ரஹ்மபாக மென்றும் இரு வகைப்படும் கர்ம பாகம் என்னும் பூர்வ பாகத்தின் அர்த்தத்தை ஸ்ம்ருதிகள் என்னும் தர்ம சாஸ்த்ரங்களைக் கொண்டே அறிந்துகொள்ள வேண்டும். உத்தரபாக மென்னும் ப்ரஹ்ம பாகத்தின் அர்த்தங்களை இதிஹாசங்களையும் புராணங்களையும் கொண்டே நிச்சயிக்கவேண்டும் என்பது இதன் பொருள்

இனி சில முக்யமான இடங்களில் சூத்ரங்களை எடுக்காமல் பொருளை மட்டும் அறிந்து கொள்வோம்,

ஆத்மாக்கள் உய்வதற்கு வேண்டிய அர்த்தங்களை அறிவிப்பதில் புராணங்களைக் காட்டிலும் இதிஹாசங்கள் சிறந்தவை இதிஹாசங்களில் சிறந்த ஸ்ரீராமாயணம் பிறர் துன்பத்தைப் போக்குவதற்காகத் தான் சிறையிருந்த பிராட்டியின் (கிருபையின்) பெருமையைச் சொல்லுகிறது. ஆக ஸ்ரீராமாயணத்தால் புருஷகாரத்தின் பெருமை சொல்லப்பட்டது

> ('புருஷகாரம்' என்ற சொல்லுக்குச் சேர்த்து வைத்தல் என்று பொருள் அதாவது தன் குற்றங்களைக் கண்டு அஞ்சி ஆச்ரயிக்கக் கூசும் சேதனனுக்கு வேண்டிய அறிவுரைகளையும், இவன் அபராதங்களைக் கண்டு சீறித் தண்டிக்க முயலும் ஈச்வரனுக்கு வேண்டிய அறிவுரைகளையும் கூறித் திருத்தி இருவரையும் சேர்த்து வைத்தல் என்றபடி)

இப்படிப் புருஷகாரம் செய்வதே பிராட்டிக்கு இயல்பாகையால் இவளுக்குப் புருஷகாரம் என்றே பெயர் ஏற்பட்டுள்ளது

புருஷகாரம் செய்வார்க்கு மூன்று பண்புகள் அவசியம் இருத்தல் வேண்டும் அவை கிருபை, பாரதந்த்ரயம், அநந்யார்ஹத்வம் (கருபையாவது—பிறர் துன்பம் கண்டு

இபா ர க்கமாட்டாமை பாரதந்த்ர்யமாவது-ரக்ஷகன் இட்ட வழ ம் கை, அநநயாாஹத்வமாவது—பிறாககு உரி யை ாதிருக்கை).

மமூன்று குணங்களும் பிராட்டிக்கு இயலபாகவே உள் ள என்பதை தெளிபபடுததவே ராமாவதாரததில் மூ முறை பிரிநது காட்டினுள் ஆகையாலே இவள் புருஷகாரம் அவசியம பலிக்கும் என்றபடி.

தல பிரிவு ராவணன் பிரிததது இது கிருபையை வெளி படுததும். இரணடாம பிரிவு நகரத்தார பழிச்சொல கா மைச் பிரிநது வால்மீகி ஆசிரமம சென்றதும, மூ ம பிரிவு நைமிசாரணயத்தில யாகசாலையில் தா ன பெ னை யலலது வேறறியாதவள எனபதைக காட்ட சபத கூறி பூமிக்குள் இறங்கியது)

கூடியிருக்கும தசையில் குற்றங்களோடு கூடியுள்ள சே னை அங்கீகரிக்குமபடி ஆவன கூறி ஈசுவரனைத திருத்து வா ள பிரிநத தசையில ஈசுவரன விஷயததில ருசியை விளை வி ஆசரயிககுமபடி சேதனனைத திருததுவாள் உப தேசத்தால் திருந்தாதபோது சேதனனை அருளாலே திருத் துவாள ஈசுவரனைக குணங்கள், ரூபம, விலாசசேஷ்டிதங்கள முதலிய அழகாலே வசீகரிததுத திருததுவாள்.

ஆக ஸ்ரீராமாயணததால புருஷகார வைபவம சொல் லப்பட்டது புருஷகாரதத வைபவமாவது தோஷததை யு எணமினமையையும பாாததுக கைவிடாமை மட்டு மில் ரி அவவிரணடையும அங்கீகரிபபதறகு உபஹாரமாகக் கொளளுகை ராக்ஷசிகளிடததில தோஷ குண ஹாநிகள இருந்துமிருநதும் அவறறைப் பொருட்படுததாமல் புருஷ காரம பணணினள; ரக்ஷிததாள்

மஹாபாரதததால் தன் மேன்மையைப் பாராமல தூது சென்றும தன ரக்ஷண காாயத்தைச செய்த கிருஷ்ண னுடைய ஏற்றம் சொல்லுகிறது,

அறியாதனவற்றை யறிவிப்பதும ஆசாரியன் காரியம். புருஷகாரம செய்வது பிராட்டி காரியம. இப்படி அடைந்தவனை ரக்ஷிப்பது ஈசுவரன் காரியம். மஹாபாரதத்தில பாண்டவர்களுக்கு இம்மூன்று மில்லாமல் அவற்றையும தானே ஏறிட்டுக்கொண்டு காரியம் செய்தபடியால உபாய வைபவம சொல்லப்பட்டது, உபாய வைபவமாவது: தோஷ குண ஹீநதையைப் பாராமல் அவற்றையே பச்சையாகக் கொண்டு அங்கீகரிக்கை.

ராக்ஷசிகள் தோஷம வெளியிடைமலே பாண்டவர்களுக்கு தோஷ மேது? எனில, மஹாசபையில பஞ்சபாண்டவர்களான த்ரௌபதியின பரிபவததைப் பாரத்திருந்தது க்ஷத்ரிய தோஷம க்ஷத்ரிய தாமமான போரைச செய்து அவர்களை வென்று த்ரௌபதையை மகிழ்விக்க வேண்டிய பகைவரிடததில கருணை காட்டியது அர்ஜுனனுடைய பாக தோஷம. உபாயமாயிருப்பதே ஈசுவரனுடைய மற்ற உபாயங்களை அநுஷ்டித்தவர்கட்கும் பலம் ஈசுவரனே யாகையால ஈசுவரனுக்கு உபாயமென்னும்படியா.

இப்படி உபாயபூதனான ஈசுவரன பிராட்டி செய்யலான புருஷகாரத்தையும, ஆசாரியன செய்யும் காரியத்தையும் தானே ஏறிட்டுக்கொண்டு காரியம செய்ததும, பாண்டவர்களுக்காகத் தூது சென்றதும, பாரதத்தில் தேரோட்டியதும, பரம ரஹஸ்யமான பரபத்தியை உபதேசித்ததும, தன்னைச் சரணமடைந்த த்ரௌபதிக்காக —அவள் மங்கள நாண் இழக்காமைக்காக

பரபத்தி பண்ணுவதற்கு - சரணாகதிக்குக் காமங்களுக்குப் போல இன்ன தேசத்தில் பண்ணவேண்டும; இன்ன காலத்தில் பண்ணவேண்டும்; இன்ன ப்ரகாரததால் பண்ணவேண்டும், இன்னார் தான் பண்ணலாம; இன்ன பலந்தான் உண்டு என்ற நியதியில்லை ஆனால விஷய நியமம் ஒன்று மட்டும் உண்டு அதாவது கண்டு பற்றக்கூடிய விஷயமாய் கல்யாண குணபூர்ண விஷயமாய் இருக்கவேண்டும் அதாவது

ஸ்ரீய. பதியினுடைய அர்ச்சாவதாரத்திலேயே ப்ரபத்தி பண்ணவேண்டும்.

ப்ரபத்தி பண்ணும் அதிகாரிகள் மூவகைப் படுவார் அதாவது நம்மைப் போன்ற அஜ்ஞானிகள், பூர்வாசார்யர்களைப் போன்ற ஜ்ஞாநாதிகர், ஆழ்வார்களைப் போன்ற பக்திபரவசர்கள்.

நாம் பண்ணும் ப்ரபத்தியை உபாயமாகக் கருதலாகாது. இப்ப்ரபத்தி சித்தமான உபாயமான எம்பெருமானை உபாயமாக வரிப்பதேயன்றி உபாயமாக மாட்டாது இவ்வாத்மா அசேதனமன்று, அறிவுடையவன் என்பதைக் காட்டவும், ஈச்வரனுடைய ரக்ஷணத்தைத் தடுக்காமல் அநுமதிப்பதைக் காட்டவும் அமைந்த இப்ரபத்தியை உபாயமாக நினைப்பதையும் இது பொறுது மற்ற உபாயங்களையும் இது பொறுது. ஈச்வரனை உபாயமாக வரிப்பதை உபாயமாக நினைப்பது ரக்ஷிக்கக் கடமைப்பட்ட தந்தையிடத்தில் தன்னை ரக்ஷிப்பதற்குக் கையெழுத்து வாங்குவது போன்று இழிதகவுடையது பேற்றுக்கு உபாயம் அவன் நினைவே. அதாவது இச்சேதனன் உய்யவேண்டுமென்ற இரக்க குணத்தோடு கூடிய இறைவனே உபாயம் என்றபடி. அந்த இரக்க குணம் இறைவனுக்கு எப்போதுமுண்டு இவன் தன்னை ரக்ஷித்துக்கொள்ளத் தான் முயல்வதனாலே அது பலிப்பதில்லை எனக்கு நான் ரக்ஷகனல்லேன்; நீயே ரக்ஷகன் என்ற எண்ணமுண்டானால், அவன் இரக்கம் பலன் தரும். ஆகையாலே ப்ரபத்தியு முபாயமன்று: ப்ரபத்தி பண்ணப்படுகின்ற இறைவனே உபாயம்

பிராட்டி அசோகவனத்தில் இராவணனைச் சுட்டெரித்துச் சிறை மீளக்கூடிய சக்தியை கைவிட்டிருந்தது போல, ப்ரபத்யுபாய நிஷ்டர்கள் உபாயாந்தரங்களை அநுஷ்டிக்கச் சக்தியிருந்தாலும் அதனை விட்டிருக்கவேண்டும்.

த்ரௌபதி துர்யோதனன் சபையில் லஜ்ஜையை விட்டு இருகை கூப்பியது போல் ப்ரபந்நன் ப்ரபத்திக்கு விரோத

